# கல்கி

KALKI

23-7-72

45 காசு





# சக்தி அளிக்கும் விவா






## உடனடியாக கரையும் போஷாக்கு பானம்!

விவா சுவை செறிந்தது. விவா போஷாக்கு அளிப்பது. விவா கனிமமானது. விவா உடனடியாக கரைகிறது. எல்லோரும் விரும்புவது — விவா.

ஏனெனில் விவா தூய பாலாடைக் கலவையோடு இன்னும் பல நல்ல பொருட்கள் அடங்கியது. விவாவில் உள்ள ப்ரோட்டீன் உங்களுக்கு வலிமை அளிக்கிறது. விவாவில் அடங்கிய கார்போஹைட்ரேட் உங்களுக்குப் புத்துணர்ச்சியைத் தருகிறது. விவாவில் மால்ட் செய்யப்பட்ட பார்லியும், கோதுமையும் நிறைந்துள்ளது. எனவே விவா எல்லாவற்றையும் விட சுவைமிகுந்த போஷாக்கு பானமாகத் திகழ்கிறது.

விவா அதிநவீன தொழில்நுட்ப முறையில் உருவானது. எனவே அதன் பூரண போஷாக்கு தன்மை நீடித்து நிலைத்து நிற்கிறது. மேலும் உடனடியாக கரைகிறது.

இன்றே உங்கள் குடும்பத்துக்கு ஒரு பாட்டில் விவா வாங்கிச் செல்வீர் — புதிய வலிமையும் புத்துணர்ச்சியும் பெறுவீர்!

சிறந்த சுவைக்கும், செறிந்த சக்திக்கும் நவீன **விவா**

ULKA-V6-TAM

# கல்கி
## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

பரிதாபி ஆடி 8 ★ ஜூலை 23, 1972


மூடிய தொழிற்சாலைகள்.... — 3
மோசம் செய்யலாமா? — 6
தமிழ் நாட்டிலே... — 7
தேவியின் திருவடித் தியானம் — 9
அலை ஓசை — 11
ஸ்கூட்டர் திருடன் — 21
கோலாகல 'கெரோ' — 25
சத்திய வெள்ளம் — 27
இளைஞர் சமுதாயம் — 37
.... சென்னைத் திருக்கோயில் — 41
வட்டமேஜை — 42
லைக்கோ லாரநாதன் — 43
அன்பே அகிலா! — 52
விளக்கு — 55
ஆபரணம் — 56
பெண் பெண்தான்! — 65
மறுபடியுமா? மாட்டேன்? — 70


| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| இதர நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை(இலங்கைநாணயம்) | ரூ. 27-00 | ரூ. 13-50 |



# காஞ்சீபுரம் ஸ்ரீ வரதராஜப் பெருமாள்

# ரத்னங்கி கைங்கரியக் கமிட்டி

ஸ்ரீரங்கத்திலும் திருப்பதியிலும் உற்சவமூர்த்திகளுக்கு உள்ளது போன்று காஞ்சியில் கோயில் கொண்டுள்ள **ஸ்ரீ வரதராஜப் பெருமாள்** உற்சவ மூர்த்திக்கு **ரத்னங்கி** செய்து அணிவித்து அந்த ஆனந்தத்தை அனுபவிக்க வேண்டும் என்று பக்தர்கள் உள்ளத்தே எழுந்த ஆசையின் காரணமாக இக்கமிட்டி அமைக்கப்பட்டிருக்கிறது.

இக்கமிட்டியின் தலைவர் முன்னாள் மத்திய அமைச்சர் திரு டி. ஆர். பட்டாபிராமன் அவர்கள். திரு ஓ. வி. அளகேசன் எம்.பி., டி.வி.எஸ். அதிபர் திரு டி.எஸ். ராஜம், டாக்டர் ஆர். சுப்பிரமணியம், இந்தியா சிமெண்ட்ஸ் அதிபர் திரு கே.எஸ். நாராயணன், ஷெரீப் திரு எம். ஏ. எம். ராமசாமி, அட்வகேட் திரு டி. ராமசாமி ஐயங்கார், ஸ்ரீமதி சரோஜினி வரதப்பன், திரு வி.கே. ராமசாமி முதலியார், திரு பிஜய்ராஜ் முத்தா முதலிய அன்பர்கள் இதில் உறுப்பினர்களாக உள்ளனர்.

இத் தெய்வத் திருப்பணிக்கு ஸ்ரீ காஞ்சி காமகோடிப் பெரியவர்களும், ஸ்ரீ அஹோபில மடம் ஜீயர் சுவாமிகளும், ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகளும், ஸ்ரீ பன்றிமலை சுவாமிகளும், அருளாசி வழங்கியுள்ளார்கள்.

இதற்கு ஐந்து லட்சம் ரூபாய் செலவாகும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

ஆஸ்திக பெருமக்களும், பக்திமான்களும், ஏனைய அன்பர்களும் இந்த **ரத்னங்கி கைங்கரியத்துக்குப் பொன்னாகவும், கல் நகைகளாகவும் ரொக்கமாகவும்** நன்கொடைகள் வழங்க வேண்டுகிறோம்.

கமிட்டியின் தலைவர் திரு டி. ஆர். பட்டாபிராமன், 'தி குரோவ்', தேனாம்பேட்டை, சென்னை-18 என்ற முகவரிக்காவது, கமிட்டியின் பொருளாளர்—காப்பாளர் திரு டி. கே. சம்பத், அட்வகேட், வேதாசலநகர், செங்கல்பட்டு என்ற முகவரிக்காவது நன்கொடைகள் அனுப்பி **அருளாளப் பெருமாளின்** பேரருளுக்குப் பாத்திரமாகும்படி கேட்டுக் கொள்ளுகிறோம்.

கல்கி

மலர் 31
இதழ் 52



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா

-- பாரதியார்

# மூடிய தொழிற்சாலைகள் திறக்கப்படுமா ?

மூடிக்கிடக்கும் சிம்ஸன் கம்பெனித் தொழிற்சாலைகளைத் திறக்க முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டுள்ளன என்ற செய்தி மகிழ்ச்சிகரமானதாகும். அம் முயற்சிகள் வெற்றிகரமாக முடியவேண்டும் என்று வாழ்த்துவோம்.

சுமார் 15,000 தொழிலாளர்கள் இந்த நிறுவனங்களில் வேலை செய்கின்றனர். கடந்த ஏழு அல்லது எட்டு மாதங்களாக இவர்களுக்குத் தொடர்ந்து வேலையோ, நிச்சயமான சூழ்நிலையோ, நிலையான வருமானமோ கிடைக்கவில்லை. 15,000 குடும்பங்கள் அனுபவித்துக் கொண்டு வரும் அவல நிலை இது. தொழிலாளர்களின் நலனுக்காகவே தொழிலாளர் தலைவர்கள் பாடுபடுவது உண்மையானால், அவர்கள் கவனிக்க வேண்டிய நிலைமை இது.

உற்பத்தி நின்றுவிட்ட காரணத்தினால், நாட்டின் பொருளாதாரத்துக்கு ஏற்பட்டுள்ள, ஏற்பட்டுக் கொண்டிருக்கிற நஷ்டம் மகத்தானது. இத் தொழிற்சாலைகளில் உற்பத்தி செய்யப்படும் பொருள்கள், இதர பல தொழில்களுக்கு இன்றியமையாத மூலப் பொருள்களாகும். இவை கிடைக்காவிட்டாலோ, தாமதமாகக் கிடைத்தாலோ, கிடைப்பதில் தடைகள் ஏற்பட்டாலோ, இவற்றை நம்பி இயங்கிக் கொண்டிருக்கும் பல்வேறு தொழிற்சாலைகளில் உற்பத்திச் சுணக்கம் ஏற்படுகிறது. இப்படிப் பாதிக்கப்பட்டுள்ள தொழிற்சாலைகள் அண்டை மாநிலங்களிலும், நாட்டின் இதர பகுதிகளிலும் சிதறிக் கிடக்கின்றன. நாட்டின் ராணுவத் தேவைகளுக்கு வேண்டிய பல பொருள்களும் கூட இங்கே தயாரிக்கப்படுவதால் நாட்டின் பாதுகாப்புக் கேந்திர ஸ்தானங்களிலும் கூட நஷ்டங்கள் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. வேதனை தரும் இந்த நிலைமை நீடித்தால், தமிழ் நாட்டில் அமைந்துள்ள தொழில்கள் மற்ற மாநிலங்களுக்கு மாறிப் போகக் கூடும். புதுத் தொழில்களை ஆரம்பிப்பதிலும் தாமதங்கள் ஏற்படலாம். இம்மாதிரி சூழ்நிலையில் நமது மாநிலத்துக்கு ஏற்படும் மகத்தான நஷ்டத்தை ரூபாய்க் கணக்கில் மதிப்பிட்டுச் சொல்ல முடியாது.

இந்தப் பின்னணியில் சிறிது சிந்தித்துப் பார்த்தால், மூடிக் கிடக்கும் தொழிற்சாலைகளைத் திறக்க வேண்டியது எவ்வளவு அவசியம், அவசரம் என்பது புரியும். இதை நினைவில் கொண்டு முயற்சிகள் மேற்கொண்டால் மட்டுமே பலன் காண முடியும். நிபந்தனைகள், உத்தர வாதங்கள், பழி வாங்குதல், கௌரவம் என்று சுற்றிச் சுற்றிப் பழைய பேச்சுக்களையும், தர்க்க வாதங்களையும் மாறி மாறி ஒருவர் மீது மற்றவர் வீசிக் கொண்டிருந்தால் சகதியி லிருந்து விடுபட முடியாது.

நிபந்தனைகளை ஒதுக்கி வைத்து, தொழிற்சாலைகளைத் திறந்து இயங்கச் செய்வதற்கான நோக்கத்தை மட்டும் இலக்காகக் கொண்டால்தான் நிலைமை மாறும். தொழிற்சாலைகள் சில மாதங்களாவது ஒழுங்காக உற்பத்தி செய்து வந்தால், அந்த அமைதிச் சூழ்நிலையே பல பிரச்னைகளைத் தீர்த்து வைக்க உதவும். தாமாகவே கூடச் சில பிரச்னைகள் தீர்ந்து போகவும் கூடும். பிறகு, பேச்சுவார்த்தைகள் நற்பலன் தரும்.

அரசாங்கம், நிர்வாகம், தொழிலாளர் பிரதிநிதிகள் ஆகியோர் நடத்தும் முத்தரப்புப் பேச்சு வார்த்தைகளில் அரசாங்கத்தின் பங்கு சமரசத்தை ஏற்படுத்துவதற்கும் தொழிற்சாலைகளைத் திறக்க வழி செய்யவும் அமைந்திருத்தல் அவசியம். சச்சரவுச் சூழ்நிலையிலிருந்து அமைதிச் சூழ்நிலையை ஏற்படுத்துவதுதான் அரசாங்கத்தின் பொறுப்பாக இருக்க வேண்டும்.

தொழிற்சாலைகளில் மீண்டும் உற்பத்தி துவங்க வேண்டும். தொழிற்கூடங்களில் அமைதியும், ஒழுங்கு முறைகளும் சீர்குலையாமல் இருக்க வேண்டும். இவ்விரண்டையும் பாதுகாக்கப் பேச்சு வார்த்தைகளில் ஈடுபடுபவர்கள் உறுதி கொண்டால் அடைபட்டுக் கிடக்கும் தொழில்கள் மீண்டும் இயங்கும்.

அந்த நல்ல நாள் வெகு சீக்கிரத்திலேயே வரட்டும் என்று எதிர்பார்ப்போம்.













ஜூலை 15ம் தேதி 'வன்முறை கண்டன நாள்' திமுக கொண்டாடியது - செய்தி


மத்திய அரசு


நீங்க தானே பணம் கேட்கச் சொன்னீங்க இவன் கிட்டே! இப்போ மூஞ்சியைக் காட்டுறீங்களே!
தமிழக அரசு
விவசாயிகள்


அக்காவ்!
எனக்கு நிறைய காசு கொடுக்கலேன்னு நான் கிணத்திலே குதிச்சுடுவேன் ... ஆமாம்!
தமிழக அரசு


மாநில சுயாட்சிப் போராட்டம்


அதிகாரங்கள்
மத்திய அரசு

# மோசம் செய்யலாமா?

ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள உடைமையைப் பறிமுதல் செய்து அதற்கு ஈடாக மூந்நூறு ரூபாயை வைத்துக்கொள் என்று ஒருவன் கொடுத்தால் அவனைப் பற்றி என்ன நினைப்போம்? அவன் ஒரு மோசக்காரன் என்போம். இதை ஓர் அரசாங்கமே செய்தால் அதை மோசக்கார அரசாங்கம் என்றுதான் சொல்வோம். நமது இந்திரா காந்தி அரசு இதைத்தான் செய்திருக்கிறது.

பொது இன்ஷியூரன்ஸ் — அதாவது மோட்டார் விபத்து, தீவிபத்து மற்றும் இதர விபத்துக்களுக்கு இன்ஷ்யூரன்ஸ் பாதுகாப்பு அளிக்கும் கம்பெனிகளை அரசாங்கம் தேசிய உடைமையாக்கிக் கொண்டுவிட்டது தெரிந்ததே. அதற்காக நஷ்ட ஈட்டுத் தொகை விவரங்களை இப்போது அறிவித்திருக்கிறது. இத்துறையில் செயல்பட்டு வந்த 63 இந்தியக் கம்பெனிகளின் சொத்தையும், 44 இந்தியரல்லாத கம்பெனிகளின் சொத்தையும் ஓர் ஆண்டுக்கு முன் சர்க்கார் எடுத்துக் கொண்டு விட்டனர். இவற்றின் மொத்த நிகர மதிப்பு 100 கோடி ரூபாய்க்கும் அதிகமாகும். இந்தியக் கம்பெனிகள் சொத்து சுமார் 88 கோடி; இந்தியரல்லாத கம்பெனிகளின் சொத்து 25 கோடி. சர்க்கார் இன்ஷியூரன்ஸ் கைப்புத்தகத்தில் 1969-ம் ஆண்டுக்குக் கொடுத்துள்ள மதிப்பு இது. அதற்குப் பின் 1970–71 ஆண்டுகளில் இவற்றின் மதிப்புக் கூடியிருக்குமே தவிர, குறைந்திராது. எப்படியும் ரூ. 100 கோடிக்குக் குறையாது. அதற்கு ஈடாக சர்க்கார் அறிவித்துள்ள நஷ்டஈடு 33 கோடி ரூபாய்! இது மூன்றில் ஒரு பாகமேயாகும். மிச்சமுள்ள 66 கோடியைச் சர்க்கார் கபளீகரம் செய்து கொண்டு விட்டது.

நஷ்டஈடாகக் கொடுக்கப்படும் தொகை குறைவு என்று கோர்ட்டில் வாதாடி நியாயம் கோரி யிருக்கக் கூடும் — ஓராண்டுக்கு முன்புவரையில்! இப்போது அவ்விதம் செய்ய முடியாது. அரசியல் சாஸனத்தில் திருத்தங்கள் செய்யப்பட்டு விட்ட காரணத்தினால், சர்க்கார் எடுத்துக் கொள்ளும் எந்தத் தனியார் உடைமைக்கும் ஈடாகக் கொடுக்கப்படும் நஷ்டஈட்டுத் தொகையைப் பற்றி நியாயம் கோர முடியாது. சட்டம் திருத்தப்பட்ட போதே இம்மாதிரி தனியார் உடைமைகளுக்கு நியாயமான நஷ்டஈடு கிடைக்காமல் போகும் என்று பயந்தனர். இப்போது அதை நேரில் பார்க்கின்றனர். முன்னெச்சரிக்கையாகச் சட்டத்திருத்தத்தின் மூலம் தனது அடாத செய்கைகளுக்குப் பாதுகாப்புச் செய்து கொண்டு, பின் மக்களின் சொத்துக்களைப் பறிமுதல் செய்து, தனக்குத் தோன்றிய, இஷ்டப்பட்ட தொகையை நஷ்டஈடாகக் கொடுக்கும் அரசாங்கத்தை நேர்மையான அரசு என்று எப்படிச் சொல்ல முடியும்?

நஷ்டஈட்டுத்தொகையை எந்த அடிப்படையில் நிர்ணயம் செய்தார்கள் என்பதையும் தெளிவுபடுத்தவில்லை. 1967, 1968, 1969 ஆகிய மூன்று ஆண்டுகளில் எவ்வளவு தொகை லாபப் பங்கீடு (டிவிடெண்டாக) செய்யப்பட்டதோ அதைப் போல் மும்மடங்கு என்ற அடிப்படையில் நஷ்டஈட்டுத் தொகை நிர்ணயிக்கப் பட்டிருப்பதாகச் சொல்லுகிறார்கள். ஆனால் இந்தக் கணக்குப்படி எல்லாக் கம்பெனிகளுக்கும் கொடுக்கப்படும் தொகை சமமாக இல்லை. ஏற்றத் தாழ்வு காணப்படுகிறது. மேலும் இந்த அடிப்படை, ஊதாரித்தனமாக இருந்த கம்பெனிகளுக்குச் சலுகையாகவும், சிக்கனமாகவும், திறமையுடனும் தொழில் நடத்திய கம்பெனிகளுக்குத் தண்டனையாகவும் அமைந்துள்ளது. குறிப்பிட்ட மூன்றாண்டுகளில் எந்தக் காரணத்தினாலாவது குறைவாக 'டிவிடெண்ட்' விநியோகம் செய்யப்பட்டிருந்தால் அந்நிறுவனத்துக்கு இப்போது கிடைக்கவிருக்கும் நஷ்டஈட்டுத் தொகையும் குறைவாகவே இருக்கிறது.

---

விவசாயிகள் போராட்டத்தில் உயிர் துறந்தவர்களுக்கு அனுதாபம் தெரிவிக்கும் வகையில் இம்மாதம் 9உ திரு காமராஜ் தலைமையில் சென்னையில் மாபெரும் மௌன ஊர்வலம் நடந்தது.



# தமிழ் நாட்டிலே

— தீரன் —

## நகரசபைகளும் நாகரிகமும்

தரக் குறைவாகவும், மோசமாகவும் வார்த்தைகளைப் பயன்படுத்தி ஒருவரை ஒருவர் ஏசிக் கொள்வதற்கு உதாரணமாக முன்பெல்லாம் குழாயடிச் சண்டைகளைச் சொல்வார்கள். இனிமேல் அந்த உதாரணத்துக்கு நகரசபைகளை விடப் பொருத்தமாக வேறெதுவும் இருக்க முடியாது என்று தோன்றுகிறது. சில கவுன்ஸிலர்கள் நன்றாகக் குடித்துவிட்டே அவையில் வந்து 'பெருங்குடி' மக்களாக அமரும் அளவுக்கு நம் நகரசபைகள் முன்னேறியிருப்பதாகவும் தெரிகிறது. கட்சிகளின் தலைவர்கள் கௌதம புத்தரை மேற்கோள் எடுத்துக்காட்டிப் பேசிப் பெருமைப்பட்டுக் கொண்டிருக்கும்போது அதே கட்சியின் கவுன்ஸிலர்கள் சக உறுப்பினர்களைச் செங்காங்கடை வார்த்தைகளால் அர்ச்சித்துக் கொண்டிருக்கிறார்கள். சமீபத்தில் பல நகரவைக் கூட்டங்களில் இப்படி, வாயடிகள், கையடிகள், மைக்கை வீசி எறிவது, அஜெண்டாவைக் கிழித்து அருகிலுள்ளவர் மேல் தூவுவது போன்ற அநாகரிக அசம்பாவிதங்கள் அடிக்கடி நிகழ்வதைப் பத்திரிகைகளில் பார்க்கிறோம்.

ஒரு சாதாரண மனிதனே பொது இடங்களில் எப்படி எப்படிப் பழக வேண்டும் என்ற நாகரிகம் இருக்கும்போது பல சாதாரண மனிதர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டுச் சிறப்பு மனிதராக அனுப்பப்படும் மாநகராட்சி, நகரவைப் பஞ்சாயத்து, உறுப்பினர்கள் பொதுமன்றங்களில் குறைந்தபட்ச நாகரிகத்தையாவது சொல்லிலும், செயலிலும் கடைப்பிடிக்க வேண்டாமா? நகரவை, பஞ்சாயத்து அமைப்புக்களில் பொதுமக்களுக்கு நன்மை செய்ய வேண்டும் என்ற சேவை உணர்ச்சிதான் முக்கியமே ஒழியக் கட்சி வேறுபாடுகளும், காழ்ப்பு உணர்ச்சியும் முக்கியமல்ல. ஆனால் தெருக்களுக்குப் பெயர் வைப்பதிலும், ஏற்கனவே இருக்கும் பெயர்களைக் கட்சி வெறி என்ற அடிப்படையில் உடனே மாற்றுவதிலும், தங்களுக்கு வேண்டிய வார்டா, வேண்டாத வார்டா என்று பார்த்து நன்மை தீமைகள் செய்வதிலும் இந்நாள் நகரசபைகள் தீவிரமாகி வருகின்றன. இது நகரசபைகளின் நாகரிகமாகாது. எந்தக் கட்சிக்குப் பெரும்பான்மை இருந்தாலும், எவர் அவைத் தலைவராக இருந்தாலும், நகரின் எல்லா மக்களும் வரி செலுத்துகிறார்கள் என்பதைப் புரிந்து கொள்ளும் நாகரிகம் வேண்டும். சட்டசபைகளிலும், பாராளு மன்றங்களிலும் நிலவுகிற அளவு ஆளுங்கட்சி, எதிர்க்கட்சி, மனப்பான்மைகள் நகர மன்றங்களிலும் பஞ்சாயத்துக்களிலும் கூட வந்துவிட்டன. ஆளுங்கட்சிக் கவுன்சிலர் யாரோ ஒருவர் இறந்ததற்காக அனுதாபத் தீர்மானம் கொண்டு வருகிறார்; அந்தத் தீர்மானத்தைப் பற்றிப் பேசுகையில் எதிர்க்கட்சிக் கவுன்ஸிலர், 'இன்ன போராட்டத்தில் துப்பாக்கிச் சூட்டால் பலியான பதினைந்து பதினாறு பேருக்காகவும்கூட இந்த அவை வருந்துகிறது' என வாய் திறக்குமுன்பே ஆளும் கட்சிக் கவுன்ஸிலர்கள் எழுந்து அதை மறுத்துக் கூப்பாடு போடும் அளவு நகர மன்றங்களின் நாகரிகம் இருக்கிறது. அநுதாபப்படுவதற்குக்கூட ஆளும் கட்சி தீர்மானம் கொண்டு வந்த உயிர், எதிர்க்கட்சி தீர்மானம் கொண்டு வந்த உயிர்கள் என்றெல்லாம் பிரித்துப் பார்க்கிற அளவு நம் நகரசபைகளின் 'நாகரிகம்' இருப்பது மிகவும் வருத்தப்பட வேண்டிய விஷயம்.

## வன்முறைக் கண்டன நாள்

தமிழ் நாட்டில் விவசாயிகள் போராட்டத்தை ஒட்டி நடந்த துப்பாக்கிப் பிரயோகங்களில் உயிர் இழந்தவர்களுக்கு அஞ்சலி செய்வதற்காக 9–7–72 அன்று சென்னையில் காமராஜ் அவர்கள் தலைமையில் ஒரு பிரம்மாண்டமான சர்வகட்சி மௌன ஊர்வலமும் கடற்கரையில் பொதுக் கூட்டமும் நடைபெற்றன. எல்லா ஊர்களிலும் அதே போல் ஊர்வலங்களும், கண்டனக் கூட்டங்களும் நடைபெற்றுள்ளன.

விவசாயிகளின் ஹர்த்தாலையும், மறியலையும் அமைதியாக நடக்கவிடாமல் தங்கள் கட்சி ஆட்களைவிட்டுக் கடைகளை அடைக்க விடாமல் தடுத்தும் அடைத்த கடைகளைத் திறக்கச் சொல்லி வற்புறுத்தியும், திறக்காத கடைகளில் தார் பூசியும், போர்டுகளில் இருந்த டியூப் லைட்டுகளை உடைத்தும், வன்முறைகளை நடத்தியிருக்கிறார்கள் தி.மு.க.வினர். சட்டம் ஒழுங்கைப் பாதுகாக்கும், நிர்வாகத்தைப் போலீசாரிடம் விடாமல் அவர்கள் தங்கள் கட்சி ஆட்களிடமும் விட்டிருப்பதுபோல் தோன்றியது.

இவ்வளவுக்கும் பின் இப்போது வேடிக்கை என்னவென்றால் சாத்விகப் போராட்டத்தை முன் நின்று நடத்திய கட்சிகள் 'வன்முறைக் கண்டன நாள்' அநுஷ்டித்தது போக, தி. மு. க. தலைமையே துப்பாக்கிப் பிரயோகம் குண்டர்களின் சூறையாடல் எல்லாம் முடிந்த பத்து நாட்களுக்குப்பின் தங்கள் கட்சியினரை ஜூலை 15ந் தேதி ஊரூராக வன்முறைக் கண்டன நாள் அநுஷ்டித்துக் கூட்டங்கள் போடுமாறு அறிக்கை விட்டிருக்கிறது. அந்தக் கூட்டங்களில் பேசுகிறவர்களாவது வன்முறையாகப் பேசாமல் இருக்க வேண்டுமே என்பதுதான் நம் கவலை.

## பழைய தவறு புதிய நியாயமாகிவிடாது

பொதுமக்களும் அரசியல் நோக்கர்களும் தமிழ் நாட்டில் தி. மு. க. ஆட்சி வந்தபின் சில ஆண்டுகளாக அக்கட்சித் தலைவர்களின் பேச்சில் ஓர் அம்சத்தை இடைவிடாமல்

கவனித்து வருகிறார்கள். பொதுமக்களோ, எதிர்க்கட்சித் தலைவர்களோ தி.மு.க. ஆட்சியின் எந்தத் தற்காலத் தவறுகளைச் சுட்டிக் காட்டினாலும், உடனே, ''அன்று அவர் ஆட்சியில் அது நடக்கவில்லையா? அந்த மாநிலத்தில் அப்போது இது நடக்கவில்லையா? அவர் செய்தபோது இவர்கள் வாய் எங்கே போயிற்று?'' என்பது போல் தி. மு. க. முதல்வரோ மற்றவர்களோ காரசாரமாக எதிர்த்துக் கேட்கிறார்கள். அல்லது சுவரொட்டி போட்டு ஒட்டுகிறார்கள். 'இப்படிக் கேட்பதே தி. மு. க. அரசியலாகிவிட்டது' என்று பலர் கேலி செய்யும் அளவுக்கு இது நடக்கிறது. 'இப்போது பத்திருபது பேர் செத்துவிட்டார்களே' என்று வருந்தினால் 'அன்று முதுகளத்தூரில் சாகவில்லையா? உ.பி.யில் அலிகாரில் சாகவில்லையா?' என்று தொடர்பில்லாத வேறு விஷயங்களோடு முடிபோட்டு எதிர்த்துக் கேட்கிறார்கள். பழைய தவறுகள் புதிய நியாயமாகித் தங்களைப் பாதுகாக்காது என்பதை இப்போது தி. மு. க. வினர் புரிந்து கொண்டுள்ளனர். வீண் ஜம்பங்களை விட்டு விவசாயிகள் சங்கத்தினரையும், சர்வகட்சி நடவடிக்கை குழுவினரையும் அழைத்துப் பேச்சு வார்த்தை நடத்தியிருக்கிறார் முதல்வர்.

## அத்தனை பெருமா மிட்டா மிராசுகள்?

ஜமீன்தாரி முறை ஒழிப்பு, நில உச்சவரம்பு ஆகியவற்றின் விளைவாகப் பெரிய விவசாயிகள் என்று யாருமே இல்லை என்ற நிலை உருவாகிவிட்டது. அவ்வாறிருந்தும் சமீபத்தில் நடைபெற்ற விவசாயிகள் போராட்டத்தை மிட்டா மிராசுகளின் போராட்டம் என்றும் அதில் முற்போக்குக் கட்சிகள் ஒன்றுபட்டிருப்பது விநோதமாயிருக்கிறது என்றும் கூறித் தமிழக முதல்வர் தான் தவறாமல் தம் அறிக்கைகள் மூலமும், சொற்பொழிவுகள் மூலமும் பிரச்னையைத் திசை திருப்ப முயன்று தோற்றுவிட்டார் என்பதாகவே சொல்ல வேண்டும். விவசாயிகள் போராட்டத்தின் போது இருபதாயிரம் பேருக்கு மேல் சிறைகளில் அடைக்கப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. முதல்வரின் கணிப்புப்படி பார்த்தால், 'தமிழ் நாட்டில் இருபதாயிரம் மிட்டா மிராசுகளா இருக்கிறார்கள்?' என்று சந்தேகப்படத் தோன்றும். அரசாங்கக் கெடுபிடிகள், நில உச்சவரம்புச் சட்டங்கள் இவ்வளவையும் மீறி மிட்டா மிராசுகள் ஆயிரக் கணக்கில் மீதமிருப்பார்களே யானால் அதற்காகக் குறை சொல்லப்பட வேண்டியவர்கள் அரசாங்கத் தரப்பில் இருப்பார்களே தவிர வெளியே இருக்க மாட்டார்கள். ஏழை விவசாயிகளின் போராட்டத்துக்கு ஆதரவு தராவிட்டாலும் அபாண்டமாக அதை 'மிட்டா மிராசுகளின் போராட்டம்' என்று திசை திருப்பி உதிரிகள் பேசலாம். ஆனால் ஒரு மாநிலத்தின் பொறுப்பான முதலமைச்சர் பேசலாமா? அப்படியே ஆயிரம் ஏழைகளின் போரில் ஒரு வசதியுள்ளவரும் சேர்ந்து கலந்து கொண்டால் அது ஏழைகளின் வெற்றிதானே? அதை ஏன் முதல்வர் கிண்டல் செய்ய வேண்டும்?

## அபத்தமான பேச்சுக்கள்

தேசிய ஒருமைப்பாடு, நாடு முழுவதிலுமுள்ளவர்க்கு அளிக்கப்பட்டிருக்கும் எழுத்துச் சுதந்திரம், பேச்சுச் சுதந்திரம் இவை பற்றி யெல்லாம் கவலைப்படாமல் இங்கே சிலர், 'அந்த மாநில முதலமைச்சர் இனிமேல் தமிழ் நாட்டுக்கு வந்து இப்படிப் பேசினால் கைது செய்யப்படுவார்! இந்த மத்திய அமைச்சர் இங்கே தமிழ் நாட்டுக்கு அடிக்கடி ஏன் வரவேண்டும்?' என்பதாகக் கேட்டு அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய் என்பது போல் நடந்து கொள்கிறார்கள். இந்தியாவின் எந்த மாநிலத்தைச் சேர்ந்தவர்களும் நம் நாட்டின் மற்றொரு மாநிலம் பற்றிக் கவலைப்படவும், அக்கறை காட்டவும் உரிமை உடையவர்களே. அவர்கள் கவலை, அக்கறை ஆகியவற்றைப் பற்றி விமர்சிக்கவும் விவாதிக்கவும், எதிர்த் தரப்பாருக்கும் உரிமை இருக்கிறது. இருந்தும், 'அவரைக் கைது செய்வோம், இவரைத் தடை செய்வோம், இன்ன கட்சியைச் சட்டப்படி ஒடுக்கிவிடுவோம்' என்பன போன்ற ஆத்திரப் பேச்சுக்கள் வெறும் ஆத்திரப் பேச்சுக்களாக மட்டும் தெரியவில்லை; அபத்தப் பேச்சுக்களாகவும் தெரிகின்றன. விவரமும், விவகாரமும் தெரிந்தவர்கள் கேலி செய்யும்படியான இத்தகைய பேச்சுக்களை இனியாவது யாரேனும் பேசாமலிருக்கும்படி சம்பந்தப்பட்ட கட்சியின் பொறுப்பான தலைவர்கள் அறிவுரை கூறி வைப்பது நாட்டு நலனுக்கு நல்லதாகும்.



# தேவியின் திருவடித் தியானம்



ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

**ப**டைப்பு, காத்தல், அழித்தல் என்ற மூன்று கிருத்யங்களைச் செய்வதற்காக ஒரே பரமாத்மாதான் பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் என்று மூன்று ரூபம் கொள்கிறது. கிருத்யங்களுக்கு ஏற்றபடி அந்தந்த மூர்த்திக்குக் குணம், வர்ணம், அவஸ்தை எல்லாம் இருக்கின்றன. இந்த மூன்று என்ற வட்டத்தைத் தாண்டும்போது இம்மூன்றுக்கும் காரணமான ஒரே பராசக்தி எஞ்சி நிற்கிறது. அந்தப் பராசக்தியான, துரீய — நான்காம் — நிலையில் நாம் மனத்தை மூழ்க்கினால் சம்ஸாரத் துயரிலிருந்து விடுபடுவோம்.

இப்போது இருக்கும்படியான லோக வழியில் இதைப் பற்றி யோசிக்கச் சாவகாசம் இல்லை; மந்திரத் தியானமோ, ரூபத் தியானமோ பண்ணுவதற்கான பக்குவம் இல்லை. ஏதாவது ஒரு மந்திரத்தை ஜபிப்பது, ஓர் உருவத்தைத் தியானிப்பது என்ற பழக்கம் மனசுக்கு வருவது கொஞ்சம் சிரமம். ஆனாலும் முதலடி எடுத்து வைக்கத்தான் வேண்டும். நம் மனசுக்கு ஹிதமாக, ரஞ்சகமாக இருந்தால்தான் முதலடியே வைப்போம். அப்படி அத்யாத்ம மார்க்கத்தில் ஹிதமான ஒரு முதலடி இருக்கிறது. அதுவே அம்பிகையின் திருவடி. எவ்வித சிரமமுமின்றி எவரும் தேவியினுடைய சரண கமலத்தை தியானிக்கத்தொடங்கலாம். அந்தச் சரணாரவிந்தத்தில் தானாக மனசு நிலைத்து நிற்கப் பழகும். இப்படி எப்போதும் உபாசித்தால் அவளுடைய கடாக்ஷத்தால் ஜனன நிவிருத்தி ஏற்படும். அல்லது முதலில் அவளது மகிமையைச் சொல்லும் துதிகளைப் படிக்கலாம். முதல் படி பாராயணம்; அதற்கப்புறம் ஜபம்; பின்பு தியானம் பண்ணுவது. அப்படித் தியானம் பண்ணும்போது, 'பராசக்தி! இந்த உடம்பிலிருந்து உயிர் போகும் தருணத்தில் நான் உன்னையே தியானம் பண்ணிக் கொண்டிருக்கும்படியாக அநுக்கிரகம் செய்ய வேணும்' என்று பிரார்த்தித்துக் கொள்ள வேண்டும். இப்படி ஒவ்வொரு நாளும் அவளுடைய சரணாரவிந்தத்தைப் பிரார்த்தித்து வேண்டிக்கொண்டால் உயிர் போகும் தருணத்திலும் அவளுடைய கடாக்ஷத்தால் அவளுடைய தியானம் வரும். இந்த உடல் போன பின் இன்னோர் உடல் வாராமல் சம்ஸாரத்திலிருந்து விடுபடலாம்.

தேவியும் குருவும் ஒன்றே. குரு பாதுகையும் தேவி பாதுகையும் ஒன்றே. குரு பாதுகையைச் சந்திர மண்டலத்தில் தியானம் செய்ய வேண்டும் என்பது சாஸ்திரம்.

சூரியன் சுயமான பிரகாசத்தை உடையவனாக இருக்கலாம். நமக்கு அவன் ஒளி கொடுக்கிறான் என்றாலும் அவனால் தாபம் உண்டாகிறது; வேர்க்கிறது; தாகம் எடுக்கிறது. அம்பாளுடைய பிரகாசம் நமக்கு ஒளியும் கொடுக்கிறது; தாபத்தையும் நீக்குகிறது. அது சந்திரிகையின் ஒளி போல் இருக்கிறது. தாபசாந்தி பண்ணுவது அமிர்தம். அமிருதமாக நமக்குத் தாபத்தை நீக்கிச் சாந்தியைக் கொடுத்துக் கொண்டு பிரகாசிக்கிறது அம்பிகையின் கடாக்ஷமும் சரணாரவிந்தமும்.

நமது தேசத்தில் இருக்கிறவர்களுக்குக் குளிர்ச்சியில் ஒரு பிரீதி. 'அவன் குளுமையாக இருக்கிறான். குளுமையாகப் பேசினான். இப்போதுதான் என் வயிறு குளிர்ந்தது' என்று சந்தோஷ விஷயங்களுக்குச் சொல்வோம்.



மேல் நாட்டார்களுக்கு இது நேர்மாறாக இருக்கலாம். அவர்களுடைய பிரதேசம் ஒரே குளிரானதால் அவர்களுக்கு (Warmth) உஷ்ணந்தான் இன்பம் அளிக்கும். கோல்டு (Cold) என்றால் நம்முடைய எண்ணத்துக்கு நேர் விபரீதமான அர்த்தம்.

நமக்குச் சந்திர கிரணம் மாதிரி தாபத்தை நீக்கிக் குளுமையைக் கொடுத்து ஆனந்தத்தை அளிப்பவள் அம்பிகை. அம்பிகை சந்திர மண்டலத்தில் வாசம் செய்வதாகப் பல இடங்களில் சொல்லியிருக்கிறது. நமக்கு இன்பம் கொடுக்கிற பெருநிதி அவள்தான். அந்த சாக்ஷாத் பரதேவதையின் சரணத்தைத் தியானம் பண்ணிப் பண்ணிச் சுத்தமாகி நித்திய க்ஷேமத்தை, ஆனந்தத்தை அடைவோமாக.

# இலவசம்!




## புத்தம் புதிய போர்ஹென்ஸ் புத்தகம்—'பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை'.

இந்த விவரமான வண்ணப் புத்தகத்தை இலவசமாகப் பெறுங்கள்! இன்றே இக் கூப்பனை அனுப்புங்கள்.

மானேஜர், டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை எண் 10031, பம்பாய் 1.

"பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்னும் போர்ஹென்ஸ புத்தகத்தின்* ஒரு பிரதியை இலவசமாக எனக்கு அனுப்பவும். தபால் செலவுக்காக 25 காசு தபால் தலை அனுப்பியுள்ளேன்.

பெயர் ______________________ வயது __________

முகவரி ______________________________________

*எந்த மொழியில் புத்தகம் வேண்டுமோ, அதன் கீழ் கோடிடவும். ஆங்கிலம், இந்தி, மராட்டி, குஜராத்தி, உருது, வங்காளி, அஸ்ஸாமி, தமிழ், தெலுங்கு, மலையாளம் அல்லது கன்னடம்.

**போர்ஹென்ஸ்** பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

100F-152 TAM



# அலைஓசை

அமரர் கல்கி

## 15. புனர்ஜன்மம்

'ஹோ' என்ற பேரோசை கேட்டுக் கொண்டிருந்தது. சிறிது நேரம் வரையில் அந்த ஓசையைத் தவிர வேறு சத்தம் எதுவும் கேட்கவில்லை. வேறு நினைவு ஏதும் ஏற்படவில்லை. அது என்ன சத்தமாயிருக்கும் என்று சீதா யோசித்தாள். நெடுநேரம்வரை அதே யோசனையாயிருந்தாள். சட்டென்று நினைவு வந்தது. அம்மா அடிக்கடி எச்சரிக்கை செய்திருந்த அலை ஓசையாகத்தான் இருக்க வேண்டும். ஆம், ஆம்; அலைஓசைதான்! காதே அடைத்துப் போனது போலக் கேட்கிறது. இந்தச் சத்தம் கேட்கத் தொடங்கியது எப்போதிருந்து? எப்போதிருந்து? எப்போதிருந்து? — இதோ நினைவு வருகிறது. தண்ணீரில் முழுகியதிலிருந்து தண்ணீரில் மூழ்கி மூச்சு முட்டிப் போனதிலிருந்து. மூச்சு முட்டும் தருணத்தில், தண்ணீருக்கு மேலே இருந்தபோது இவ்வளவு சத்தம் இல்லையே? தண்ணீருக்குள் இவ்வளவு அதிக சத்தமாயிருக்கிறதே?' என்று எண்ணியது இப்போது சீதாவுக்கு நினைவு வந்தது. அதைத் தொடர்ந்து, 'சரி, இனி பிழைக்கப் போவதில்லை' என்று எண்ணியதும், 'அம்மா! உன் பேச்சைக் கேட்காமல் போனேனே?' என்று வருத்தப்பட்டதும் நினைவுக்கு வந்தன. அந்த ஆபத்தான தருணத்தில் கையில் ஏதோ ஒன்று தட்டுப்பட்டது. பிறகு அப்படித் தட்டுப்பட்டதும் ஒரு கைதான் என்று தெரிந்தது. அது யாருடைய கை? வளையல் அணிந்திருந்தபடியால் ஒரு ஸ்திரீயின் கைதான் அது! அந்த ஸ்திரீ யார்? ஆபத்துக் காலத்தில் தன்னை வந்து காப்பாற்றுவதாகச் சொல்லியிருந்த தன்னுடைய அன்னையாகத்தான் இருக்க வேண்டும்; இப்படியெல்லாம் எண்ணமிட்டது வரையில் சீதாவுக்கு இப்போது நினைவுக்கு வந்தது. கண்ணை மட்டும்தான் திறக்க முடியவில்லை. ஒரே இருட்டாயும் வெளிச்சமாயுமிருக்கிறது. ஆம், இருட்டாயுமிருக்கிறது; வெளிச்சமாயுமிருக்கிறது. இருட்டில் வெளிச்சமாயிருக்கிறது; வெளிச்சத்தில் இருட்டாயிருக்கிறது. ஆனால் கண்ணைத் திறந்து பார்க்க முடியவில்லை. எவ்வளவு முயற்சி செய்தாலும் கண் இமைகளைத் திறக்க முடியவில்லை....!

ஏதோ குரல் கேட்கிறதே, அது என்ன? யார் குரல்? யார் என்ன சொல்கிறார்கள்? — இந்த நாசமாய்ப் போன அலைச் சத்தம் மட்டும் அடங்கினால்?... அலைச் சத்தம் இப்போது கொஞ்சம் குறைந்துதான் இருக்கிறது! யாரோ இரண்டு பேர் பேசுகிறார்கள். என்ன பேசுகிறார்கள்? கண் தெரியாவிட்டாலும் நல்லவேளையாகக் காது கேட்கிறது; கவனித்துக் கேட்கலாம்.

''உங்கள் மனைவிக்கு நினைவு வந்து கொண்டிருக்கிறது. கண் இமைகள் கொஞ்சம் அசைகின்றன. சீக்கிரத்தில் கண்ணை விழித்துக் கொள்வாள்.''

''இன்றைக்குச் சீதாவுக்குப் புனர்ஜன்மந்தான். உன்னாலேதான் சீதா பிழைத்தாள். நீதான் அவளுக்கு இரண்டாவது தாயார்!''

''சீதா தாயில்லாப் பெண் என்று கேள்விப்பட்டேன். அது உண்மையா?''

''தாய் இல்லாமல் பெண் எப்படி வருவாள்? இராமாயண சீதையைப் போல் பூமியிலிருந்தே வந்துவிடவில்லை. தாயார் வயிற்றில்தான் பிறந்தாள்.



ஆனால் இப்போது அவளுக்குத் தாய் உயிரோடில்லை. இனிமேல் நீதான் அவளுக்குத் தாயார்.''

''அப்படியேயாகட்டும். சீதாவுக்கு நான் தாயார் என்றால், நீங்கள் எனக்கு மாப்பிள்ளையாக வேண்டும். அழகான மாப்பிள்ளை நீங்கள்! கட்டிய மனைவி தண்ணீரில் முழுகிக் கொண்டிருக்கையில் படகிலிருந்து இறங்காமலிருந்த மாப்பிள்ளை!''

''அதற்கு நீதான் காரணம்! பலாத்காரமாக இரண்டாயிரம் ரூபாய் பணத்தை என்னிடம் கொடுத்து விட்டாய்! அதைச் சட்டைப் பையில் வைத்துக் கொண்டு எப்படித் தண்ணீரில் திடீரென்று குதிக்க முடியும்? அந்த முட்டாள் படகுக்காரன் உளறியதை நீ புரிந்து கொள்ளவில்லை போலிருக்கிறது. இந்த ஏரியில் எங்கேயும் கழுத்துக்கு மேலே தண்ணீர் கிடையாதாம். சீதா தற்கொலை செய்து கொள்ள எண்ணியிருந்தால் கூடச் சாத்தியமாகியிராது.''

''போதும், நிறுத்துங்கள்! சீதாவுக்குப் பிரக்ஞை வந்து கொண்டிருக்கிறது. சீக்கிரம் உங்களுடைய மடியில் எடுத்துப் போட்டுக் கொள்ளுங்கள். அவளுக்கு நல்ல நினைவு வரும்போது என்னுடைய மடியில் அவள் படுத்திருப்பதையும், உங்களுடைய உடுப்புக்கூட நனையாமல் இருப்பதையும் பார்த்தால் ஒரு நாளும் உங்களை மன்னிக்க மாட்டாள்!''

''உனக்குத் தெரியாது, தாரிணி! உனக்குத் தெரியாது. எங்கள் ஊர்ப் பெண்களுக்கு எவ்வளவு தூரம் மன்னிக்கும் சக்தி உண்டு என்பது உனக்குத் தெரியாது!''

* * *

மேலே கண்ட சம்பாஷணையில் எல்லா விவரங்களும் சீதாவின் மனத்தில் பதியவில்லை. சில சில வார்த்தைகள் தான் பதிந்தன. ஆனால் அவற்றிலிருந்து தான் முழுகுவதற்கு முன் நடந்த சம்பவங்கள் எல்லாம் நன்றாக நினைவுக்கு வந்து விட்டன. ஏரியில் விழுந்து தத்தளித்து முழுகிக் கொண்டிருந்த தன்னைக் காப்பாற்றியது தாரிணி என்பதைத் தெரிந்துகொண்டாள். தான் அப்போது தாரிணியின் மடியில் படுத்திருப்பதையும் உணர்ந்தாள். ராகவன் 'மன்னிக்கும் சக்தி'யைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தபோது தாரிணி தன்னை அலுங்காமல் எடுத்து ராகவன் மடியில் போட்டதையும் அவள் உணர்ச்சியினால் அறிந்தாள்.

''சீதா! சீதா!'' என்று கூப்பிட்டுக் கொண்டே ராகவன் அவளுடைய கண்ணிமைகளைத் தொட்டான். உடனே கண்கள் திறந்து கொண்டன. திறந்த கண்கள் ராகவனுடைய முகத்தை உற்று நோக்கின. அந்தக் கண்களின் மூலமாகச் சீதா என்ன செய்தி கூறினாளோ நமக்குத் தெரியாது. ''ஆம்; நீர் எவ்வளவு கிராதகராயிருந்தாலும் உம்மை மன்னிக்கும் சக்தி என்னிடம் இருக்கிறது!'' என்று தான் சொன்னாளோ, அல்லது, ''என்னுடைய 'மன்னிக்கும் சக்தி'க்கும் ஒரு வரம்பு உண்டு'' என்று எச்சரிக்கை தான் செய்தாளோ நாம் அறியோம்.

''சீதா! நான் யார் என்று தெரிகிறதா, நன்றாகப் பார்த்துச் சொல்!'' என்றான் ராகவன்.

சீதா ஈனஸ்வரத்தில், ''தெரியாமல் என்ன? தாங்கள் மிஸ்டர் சௌந்தர ராகவன், எம்.ஏ.'' என்றாள்.

''பலே! பலே! அப்படிச் சொல்லு! அதோ உன் எதிரில் யார் தெரிகிறதா? சொல், பார்க்கலாம்.''

''தெரியாமல் என்ன? என் அம்மாவை எனக்குத் தெரியாதா?''

இதைக் கேட்ட ராகவன் சிறிது திடுக்கிட்டான். தானும் தாரிணியும் சற்று முன் பேசியது அவள் காதில் விழுந்ததா என்ன? அல்லது மூளை கலங்கிப் போய் விட்டதா?

சீதா ராகவனுடைய மடியிலிருந்து சட்டென்று எழுந்தாள். அவள் என்ன செய்யப் போகிறாள் என்று மற்ற இருவரும் யோசிப்பதற்கு முன்பு தாரிணிக்கு நமஸ்காரம் செய்து விட்டு அவளுடைய கைகளைப் பிடித்துக் கொண்டாள். ''நீங்கள் என் உயிரைக் காப்பாற்றினீர்கள். இது எனக்குப் புனர் ஜன்மம். இந்தப் புது ஜன்மத்துக்கு நீங்கள்தான் என் அம்மா!'' என்றாள்.

தாரிணி அதை மறுக்க எண்ணி, ''சீதா! நீ தவறு செய்கிறாய்! உன்னைக் காப்பாற்றியது நான் அல்ல. உன்னுடைய கணவர்...'' என்பதற்குள், சீதா, ''எல்லாம் எனக்குத் தெரியும்; அவருடைய உலர்ந்த உடுப்பையும் உங்களுடைய ஈரப் புடவையையும் பார்த்தாலே தெரியவில்லையா?'' என்றாள்.

இதற்குள் ராகவன் குறுக்கிட்டு, ''இல்லை, சீதா! தாரிணி சொல்வது

பொய். நீ வாசித்தது தான் உண்மை. தாரிணிதான் உன்னைக் காப்பாற்றினாள். எனக்கு நீந்தத் தெரியாது என்பதுதான் உனக்குத் தெரியுமே! உன்னை நான் தனியாக அழைத்து வந்திருந்தால் நம்முடைய கதி அதோகதிதான். அடுத்த தடவை உன்னைப் படகில் ஏற்றி அழைத்துப் போவதற்குள் நீந்தக் கற்றுக் கொண்டுவிடுகிறேன்'' என்றான்.

''எனக்காக நீந்தக் கற்றுக்கொள்ள வேண்டாம். நான் இனிமேல் தண்ணீருக்குச் சமீபத்தில் கூடப் போகப் போவதேயில்லை'' என்று கூறினாள் சீதா.

* * *

சீதாவின் உள்ளத்தில் என்றுமில்லாத ஆனந்தம் பொங்கிக் கொண்டிருந்தது. அந்த ஆனந்தம் அவளுடைய உடம்பின் நரம்பின் ஒவ்வொரு அணுவிலும் வெளியாகிக் கொண்டிருந்தது. யமலோகத்தின் வாசலிலிருந்து தான் திரும்பி வந்த விஷயத்தை அவள் நன்கு உணர்ந்திருந்தாள். கொஞ்சம் தாமதித்திருந்தால் உயிர் போயிருக்கும். இது புனர் ஜன்மம், மறுபிறப்பு. தான் இன்னும் ஜீவித்திருப்பது உண்மை. எதிரே தோன்றிய நீலநிற ஏரி, பசுந் தளிர் விருட்சம், வெண்ணிறப் பறவைகள் இவையெல்லாம் உண்மை. தூரத்தில் இருண்டு வந்த இடத்தில் வானம் குனிந்து பூமியைத் தழுவுவதும் உண்மை. தான் ராகவனுடைய மடியில் படுத்திருப்பதும் உண்மை. எதிரே ஈரப் புடவையுடனும், கருணை நிறைந்த முகத்துடனும் தாரிணி உட்கார்ந்திருப்பதும் உண்மை. படகு உண்மை. மோட்டார் கார் உண்மை. புதுடில்லி பங்களாவில் மாமியாரிடம் விட்டு வந்திருக்கும் தன் அருமைக் கண்மணியும் உண்மை. ஆகா! இந்த உலகம் எவ்வளவு ஆனந்த மயமானது? உயிரோடு வாழ்வது எவ்வளவு இன்ப கரமானது? இந்த வாழ்க்கையைத் துன்பமயமாக்கிக்கொள்வது போல் மூடத்தனம் வேறு உண்டா?

மூன்று பேரும் அன்றிரவு திவானுடைய வீட்டுக்குப் போன போது வெளி ஊருக்குப் போயிருந்த திவான் வந்து சேர்ந்திருந்தார். ஏரியில் நடந்த



சம்பவத்தைக் கேள்விப்பட்டு அவரும் அவருடைய குமாரிகளும் மிக்கக் கவலைக்கும் பரபரப்புக்கும் உள்ளானார்கள். தாரிணியின் தைரியத்தை வெகுவாகப் பாராட்டினார்கள். தாரிணியைத் திவானுக்குப் பெரிதும் பிடித்துப் போய் விட்டது.

அவள் தன் தோழியையும் அழைத்துக் கொண்டு அங்கு வந்துவிட வேண்டும் என்றும், எல்லோரும் தம் வீட்டில் இரண்டு நாட்கள் தங்கிவிட்டுத்தான் போக வேண்டும் என்றும் சொன்னார்.

அதை அவருடைய குமாரிகளும் ஆமோதித்தார்கள். சீதாவோ மிகவும் வற்புறுத்தினாள்.

ஆகவே, தாரிணியும் நிருபமாவும், திவானுடைய வீட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். திவான் வீடு அந்த இரண்டு நாட்களும் ஒரே கலகலப்பாக இருந்தது. அந்த இரண்டு நாட்களுக்குள் சீதாவும் தாரிணியும் இணைபிரியாத அத்தியந்த சிநேகிதிகள் ஆகிவிட்டார்கள்.

ராகவன் இதைப் பார்த்து மிக்க மகிழ்ச்சி அடைந்தான். சீதாவின் மனத்தில் ஏற்பட்டிருந்த களங்கம் அடியோடு நீங்கி விட்டதாகக் காணப்பட்டது.

டில்லிக்குப் போவதற்கு முதல் நாள் தாரிணியும் சீதாவும் தனியாக இருக்க நேர்ந்தபோது, ''சீதா! அன்றைக்கு உன்னிடம் ஒரு விஷயம் கேட்டேன். அதற்கு நீ சரியாகப் பதில் சொல்லவில்லை. நீ கழுத்தில் அணிந்திருக்கும் ரத்தின ஹாரத்தைப் பற்றித்தான். இப்போதாவது அதைப் பற்றிச் சொல்லலாமா?'' என்றாள் தாரிணி.

''அக்கா! அன்றைக்கு எனக்கு ஏதோ பைத்தியம்தான் பிடித்திருக்க வேண்டும். யாரைப் பார்த்தாலும் அகாரணமாகக் கோபம் வந்தது. நீங்கள் கூடப் படகில் 'ஹிஸ்டீரியா' என்று சொல்லிக் கொண்டிருந்தீர்கள். உண்மையில் எனக்கு 'ஹிஸ்டீரியா'தானோ என்னமோ! இல்லாவிட்டால் உங்கள் பேரில் எனக்கு எதற்கு அப்படிக் கோபம் வரவேண்டும்? நினைத்துப் பார்த்தால் வெட்கமாக இருக்கிறது!'' என்றாள் சீதா.

''அதைப் பற்றி நினைக்க வேண்டாம், சீதா! காரணம் எதுவாக இருந்தாலும் ஏரியில் அதற்கு ஒரு முழுக்குப் போட்டு விட்டாய். அடியோடு பழைய கதையெல்லாம் மறந்துவிடு!'' என்றாள் தாரிணி.

''ஆகட்டும்; மறந்துவிடப் பார்க்கிறேன். நான் அணிந்திருக்கும் ரத்தின ஹாரத்தைப் பற்றி நானே சொல்ல வேண்டும் என்று நினைத்திருந்தேன். இந்த ஊருக்கு வந்ததிலிருந்து அதுவே நினைவாக இருந்தது.''

''அது என்ன? இந்த ஊருக்கும் உன்னுடைய ரத்தின ஹாரத்துக்கும் என்ன சம்பந்தம், சீதா?''

''நேரான சம்பந்தம் இல்லைதான். ஆனாலும் ஒன்றுக்கொன்று தொடர்பாக ஞாபகம் வந்து கொண்டிருந்தது. சொல்கிறேன், கேளுங்கள்!''

இந்த முகவுரையுடன் சீதா ரத்தின ஹாரம் தனக்குக் கிடைத்த கதையைச் சொல்லத் தொடங்கினாள். தன்னுடைய தாயார் நோய்வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையாயிருந்தபோது முகமூடி அணிந்த ஒரு ஸ்திரீ திடுதிடுவென்று மச்சுப் படி ஏறி வந்தது. தாயாரிடம் இந்த ரத்தின ஹாரத்தையும் இரண்டாயிரம் ரூபாய் பணத்தையும் கொடுத்துத் தன் கல்யாணத்துக்காக என்று சொன்னது, கத்தியை மறந்து வைத்து விட்டுப் போனது, திரும்பி வந்து கத்தியை எடுத்துக் கொண்டு தன்னைக் கட்டி முத்தமிட்டு விட்டுப் போனது ஆகிய எல்லா விவரங்களையும் சொன்னாள். பிறகு தானும் அம்மாவும் கிட்டாவய்யருடன் கிராமத்துக்குப் புறப்பட்ட போது ரயில்வே ஸ்டேஷனில் பத்திரிகைச் சிறுவர்கள் கூவியதையும் பத்திரிகையில் வெளியாகியிருந்த செய்தியைப் படித்தவுடன் தனக்கு உண்டான சந்தேகத்தைப் பற்றியும் கூறினாள்.

''அக்கா! பம்பாயில் ரஜனிபூர் ராஜாவைக் கொல்ல முயன்ற ஸ்திரீ எனக்கு இந்த ரத்தின ஹாரத்தைக் கொடுத்தவள்தானோ என்ற சந்தேகம் என் மனத்தில் அப்போதே உதித்தது. இந்த ஊருக்கு நாம் வந்து சேர்ந்தது முதல் அந்த ஸ்திரீயைப் பற்றிய நினைவு அடிக்கடி வந்து கொண்டிருந்தது. அதற்கேற்றாற்போல் இவரும் ஏரிக்கரையில் அந்தச் சம்பவத்தைப் பற்றிப் பேச்சு எடுத்தார். அக்கா! உங்களுக்கு அதைப் பற்றி என்ன தோன்றுகிறது?'' என்றாள் சீதா.

''உன்னுடைய சந்தேகத்தில் உண்மை இருக்கலாம். ஆனாலும் நீ யாரிடமும் இதைப் பற்றிச் சொல்லாமலிருப்பதே நல்லது. உன் கணவரிடம் இதைப் பற்றி எப்போதாவது சொல்லியிருக்கிறாயா?'' என்றாள் தாரிணி.

''சொல்லவில்லை. சொன்னால் அவர் காது கொடுத்துக் கேட்க மாட்டார்'' என்றாள் சீதா.

''சொல்லாமலிருப்பதே நல்லது. புருஷர்களுடைய மனப்போக்கு விசித்திரமானது. ஒரு சமயம் அலட்சியமாய் விட்டாலும் விடுவார். இன்

# மைக்ரோஃபைன்ட்
# ஆஸ்ப்ரோ

## அதிவேகமாகக் கரைந்து, அதிவேகமாகக் கிரகிக்கப் படுகிறது. அதனால்தான் அது அதிவேகமாக வலியைப் போக்கி விடுகிறது–

சாதாரண வலிநிவாரண மாத்திரைகளைவிட இருமடங்கு அதிக வேகத்துடன் வலியைப் போக்கி விடுகிறது.









சாதாரண மாத்திரைகளைப் போலன்றி, ஆஸ்ப்ரோவின் நுண்ணிய அணுக்கூறுகள் அதிவேகமாகக் கிரகிக்கப் படுகின்றன. வலியின் இருப்பிடத்தை அதிவேகமாக அடைகின்றன. உங்களுக்கு அதிவேக நிவாரணம் அளிக்கின்றன.

கீழ்க்கண்டவைகளுக்கு மைக்ரோ∴பைன்ட் ஆஸ்ப்ரோ சாப்பிடுங்கள்: தலைவலி • உடல் வலி • ஜலதோஷம் • ∴ப்ளு • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி

சாப்பிடும் அளவு: வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள். தேவைப் பட்டால் மீண்டும் சாப்பிடவும். குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொற்படி

**ஆஸ்ப்ரோ** மட்டுமே மைக்ரோ∴பைன் செய்யப் படுகிறது, அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக.

நிகோலஸ் (NI) தயாரிப்பு

A.G 57 TH

# தடுமாறாமல்· நொடியில் கிளம்புங்கள்

## மற்றவர்களைவிட முன்னால் இருங்கள் — எப்பொழுதும்



கூடுதலான சக்தியைதரும்

# ஆம்கோ பாட்டரியுடன்

மிடுக்கு தேவை. காரியத்தைச் சாதிக்க கிளம்புகையில் தடுமாறி சங்கடப்படாதீர்கள். ஒரு பாட்டரி வாங்க எண்ணம் பெறும்போது, 'கூடுதலான சக்தியை தரும்' ஆம்கோ பாட்டரியைத் தவிர வேறு எதையும் சட்டை செய்யாதீர்கள். பாட்டரி கோளாறு என்ற பிரச்னையை நீங்கள் மறந்து விடலாம். கார் ஓட்டுவதை இன்பகரமானதாக ஆக்கிக் கொள்ளுங்கள்.

ஒவ்வொரு ஆம்கோ பாட்டரியும் — உங்களுடைய பாட்டரிக்கு மிகவும் தேவையான அந்த வலுவையும், நீண்ட ஆயுளையும் அளிக்க — நவீன ஆராய்ச்சி அபிவிருத்தி, சிறப்பான என்ஜினீரிங் திறன், கடுமையான தரக்கட்டுப்பாடு, கிட்டத்தட்ட 40 வருட கால அனுபவம் ஆகியவற்றால் ஆனது.




**ஆம்கோ பாட்டரீஸ் லிமிடெட்,**
யூனிடி பில்டிங்ஸ், பெங்களூர்-2.

MAC (B) AM-97 TAM

ஒரு சமயம் 'இந்த ரத்தின மாலை என்னத்திற்கு?' என்று எடுத்து எரியில் எறிந்தாலும் எறிந்து விடுவார்.''

''அந்தப் பயத்தினாலேதான் நானும் அவரிடம் சொல்லவில்லை.''

''உன் தாயார் கொடுத்த சீதனத்தை நீ பத்திரமாகக் காப்பாற்ற வேண்டும். உன் தாயார் பெயர் என்ன சீதா?''

சீதாவின் தாயார், தகப்பனார் பெயர் முதலிய விவரங்களைக் கேட்டுத் தாரிணி தெரிந்து கொண்டாள். பிறகு, ''உன் அப்பா இப்போது எங்கே இருக்கிறார்? அவர் உன்னைப் பார்க்க வருவதுண்டா?'' என்று கேட்டாள்.

''அப்பா என்னை வந்து பார்த்து எத்தனையோ நாளாயிற்று. அம்மா செத்துப் போய்விட்டாள். அப்பா உயிரோடிருக்கிறாரோ, இல்லையோ, தெரியாது. கடிதம் கூட வெகு நாட்களாய் வரவில்லை. அக்கா! நான் அநாதை. தேவப்பட்டணத்தில் என் மாமா பெண் லலிதா இருக்கிறாள். என் அருமைத் தோழி. இப்போது நீங்கள் கிடைத்திருக்கிறீர்கள். உங்கள் இருவரையும் தவிர எனக்கு வேண்டியவர்களே இல்லை.''

சற்றுப் பொறுத்துத் தாரிணி ''சீதா! ரத்தின மாலை கொடுத்த அந்த ஸ்திரீ யார் என்று உன் தாயார் உன்னிடம் எதுவும் சொல்லவில்லையா?'' என்று கேட்டாள்.

''இல்லை. ஒருவேளை அம்மாவுக்கு அது தெரிந்திராது. தெரிந்திருந்தாலும் என்னிடம் சொல்லவில்லை.''

''சீதா! அந்த ஸ்திரீயை அப்புறம் நீ பார்த்ததே யில்லையே?''

''ஒரு தடவை பார்த்திருக்கிறேன்.''

''எங்கே? எப்போது?''

சீதா புதுடில்லியில் தான் குடியிருந்த வீட்டுக்குத் திரும்பும் நாற்சந்தியில் ஒரு நாள் கத்தியும் கையுமாக அந்த ஸ்திரீயைப் பார்த்தது பற்றிச் சொன்னாள்.

''அடாடா! அவளைப் பார்க்க வேண்டும் என்று நான் எவ்வளவோ தேடிக் கொண்டிருக்கிறேன். ஆனால் அவள் என் கண்ணில் படவில்லை.''

''அப்படியா, அக்கா! அவளை எதற்காக நீங்கள் தேட வேண்டும்? உங்களுக்கு அவளைத் தெரியுமா என்ன?''

''தெரியும், சீதா!''

''எப்படித் தெரியும்?''

''அவள் என் தாயார்!''

ஒரே ஆச்சரியக் கடலில் மூழ்கிப் போனாள் சீதா. தாரிணியை வெறிக்க வெறிக்கப் பார்த்தாள். ''இப்போது தெரிகிறது உண்மை! தங்களுடைய முக ஜாடை எங்கேயோ பார்த்த ஞாபகத்தை உண்டு பண்ணிக் கொண்டிருந்தது. எதனால் என்று இப்போது தெரிகிறது'' என்றாள்.



''மாப்பிள்ளையின் தகப்பனார் இப்படி வானத்தைப் பார்க்கறதும் பெண்ணுடைய தகப்பனார் இப்படிப் பூமியைப் பார்க்கறதும்.... ஹூம் என்ன பழக்கமோ?''

''அதில்லேய்யா, அவர் வானிலை ஆராய்ச்சியாளர்! இவர் மண்வள ஆராய்ச்சியாளர்!''

---

''சீதா! நீ நினைப்பது தவறு. அந்த ஸ்திரீ என்னுடைய சொந்தத் தாயார் அல்ல; என்னை வளர்த்த தாயார். என்னுடைய சொந்தத் தாயாரும் தகப்பனாரும் யார் என்பது இன்றுவரையில் எனக்குத் தெரியாது. அதைக் கேட்டுத் தெரிந்து கொள்வதற்காகத்தான் ரஸியா பேகத்தை நான் தேடிக்கொண்டிருக்கிறேன்.''

''அவள் பெயர் ரஸியா பேகமா? அவள் முஸ்லிம் ஸ்திரீயா?''

''ஆம்; என்னை வளர்த்தவள் முஸ்லிம் ஸ்திரீதான். நாலு வருஷங்களுக்கு முன்னால் நான் பீஹாருக்குப் போயிருந்தேன், அங்கு பூகம்ப விபத்துக்கு உள்ளானவர்களுக்குத் தொண்டு செய்வதற்காக. அந்தச் சமயம் ரஸியா பேகம் ரஜனிபூர் ராஜாவைக் கொல்ல முயன்றதற்காக இரண்டு வருஷம் சிறைக்குப் போய்விட்டாள். விடுதலை அடைந்த பிறகு எவ்வளவோ தேடியும் பார்க்க முடியவில்லை! சீதா! நான் எப்பேர்ப்பட்ட துர்ப்பாக்கியசாலி என்று தெரிந்து கொண்டாயல்லவா?''

சிதாவின் கண்களில் நீர் ததும்ப, ''அக்கா! அந்த ஸ்திரீயை மறுபடியும் நான் பார்த்தால் அவசியம் உங்களுக்குத் தகவல் தெரிவிக்கிறேன்'' என்றாள்.

''அதோடு நான் அவளை அவசியம் பார்க்க வேண்டும் என்று சொல்லு. அப்படிப் பார்க்க முடியாவிட்டால் நான் என்னுடைய உயிரை விட்டுவிடத் தீர்மானித்திருப்பதாகவும் சொல்லு.''

''அக்கா! அப்படியெல்லாம் நீங்கள் தீர்மானிக்கக் கூடாது. உங்களைத்தான் நான் முழுவதும் நம்பி யிருக்கிறேன்'' என்றாள் சிதா.

## 16. தேவப்பட்டணம் தேர்தல்

''என் உயிருக்குயிரான அருமைத் தோழி சிதாவுக்கு, உன்னுடைய அன்பான கடிதம் கிடைத்தது. நீங்கள் எல்லாரும் தாஜ்மகாலுக்குப் போனது பற்றியும் ஆக்ராக் கோட்டையில் பார்த்த அதிசயங்களைப் பற்றியும் விவரமாக எழுதியிருந்ததைப் படித்து அளவில்லாத சந்தோஷம் அடைந்தேன். ரொம்ப ரொம்ப வந்தனம். அதையெல்லாம் படித்தபோது எனக்கு உங்களுடன் வந்து எல்லாக் காட்சிகளையும் பார்த்தது மாதிரியே இருந்தது. உங்களுடன் வந்து நேரில் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லையே என்று வருத்தமாயும் இருந்தது. அந்தப் பாக்கியம் எனக்கு எப்போது கிடைக்குமோ தெரியவில்லை. இந்த ஜன்மத்தில் கிடைக்கும் என்றே தோன்றவில்லை. இவரிடம் நீங்கள் எல்லாரும் தாஜ்மகால் பார்த்தது பற்றிச் சொல்லி, ''எப்போதாவது நாமும்போய் வரலாமா?'' என்று கேட்டேன். வழக்கம் போலத் தூக்கி எறிந்து பேசிவிட்டார். ''நம்முடைய தமிழ் நாட்டில் பார்க்க வேண்டியது எவ்வளவோ இருக்கிறது. தஞ்சாவூர் பெரிய கோவிலைப் பார்க்கவில்லை; மாமல்லபுரத்துக் கற்கோயில்களைப் பார்க்கவில்லை. தாஜ்மகால் பார்க்காததுதான் குறையாய்ப் போய்விட்டதாக்கும்!'' என்றார். இவரிடம் ஏன் சொன்னோம் என்று ஆகிவிட்டது. எங்கள் பேச்சை ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்த என் மாமியார் வேறே ஆரம்பித்து விட்டாள்: ''ஏதோ காசி ராமேசுவரம் போக வேண்டும் என்று ஆசைப்படுவார்கள். கேட்டதுண்டு. அந்த மாதிரி புண்ணிய ஸ்தலங்களுக்குப் போனால், போகிற கதிக்காவது பிரயோஜனமாக இருக்கும். துருக்க ராஜாக்கள் கட்டி வைத்த சமாதிகளைப் பார்க்க வேண்டும் என்று யாராவது ஆசைப்படுவார்களா? இந்தக் காலத்துப் பெண்களுடைய புத்தி ஏன்தான் இப்படியெல்லாம் போகிறதோ தெரியவில்லை'' என்று ஒரு நாளெல்லாம் எனக்கு மண்டகப்படி செய்து கொண்டிருந்தாள். வெறும் வாயை மெல்லுகிறவளுக்கு ஒரு பிடி அவல் கிடைத்தது போல் ஆயிற்று.

''டீஜாகாப்புக் கல்யாணத்துக்குப் பிறகு நான் இங்கே வந்ததிலிருந்து என்னுடைய நிலைமை முன்னைவிட ரொம்ப மோசமா யிருக்கிறதடி, சீதா! நான் என்னவென்று சொல்வேன்? ஒரு விஷயத்தைக் கேள்!

''எங்கள் வீட்டுக்கு எதிர் வீட்டில் தாமோதரம் பிள்ளை என்று ஒருவர் இருக்கிறார். அவரும் வக்கீல்தான். என் மாமனாரும் அவரும் வெகு காலம் ரொம்பச் சிநேகமாக இருந்தார்களாம். தாமோதரம் பிள்ளையின் மகனுக்கு அமரநாத் என்று பெயர். அமரநாத்துக்கும் இவருக்கும் ரொம்பச் சிநேகம். நம்ம சூரியா இங்கே படித்தபோது மூன்று பேரும் சேர்ந்தாற்போலவே இருப்பார்களாம்.

''அமரநாத்துக்கும் இரண்டு வருஷங்களுக்கு முன்னால் கல்யாணம் நடந்தது. பெண் திருநெல்வேலிப் பெண். அவளுடைய தகப்பனார் டிபுடி கலெக்டராம். நம் இரண்டு பேரையும் விட அதிகமாகப் படித்தவள். படித்திருக்கிறோம் என்ற கர்வம் கொஞ்சம்கூடக் கிடையாது. அவளுடைய கல்யாணத்தின்போதே அவளுக்கும் எனக்கும் பழக்கம் ஏற்பட்டது. ஒரு வருஷத்துக்கு முன்னால் அவள் இந்த ஊருக்கு வந்ததிலிருந்து அவள் எனக்குச் சிநேகிதியானாள். உன்னைப் போன்ற பிராண சிநேகிதி யில்லாவிட்டாலும் பேச்சுத் துணைக்குச் சௌகரியமாக இருந்தது. வெளியில் எங்கும் போகாமல், வீட்டிலேயே அடைந்து கிடந்த எனக்குச் சித்ராவின் சிநேகம் ஆறுதலாக இருந்தது. தினசரி நானாவது அவள் வீட்டுக்குப் போவேன். அல்லது அவளாவது எங்கள் வீட்டுக்கு வருவாள். இம்மாதிரி நாங்கள் சிநேகமானது எங்கள் அகத்துக்காரர்களுக்கும் ரொம்பச் சந்தோஷமாயிருந்தது.

''சீதா! அதெல்லாம் இப்போது பழங்கதையாகப் போய் விட்டது. இப்போது நாங்கள் ஒருவர் வீட்டுக்கு ஒருவர் போவதில்லை. ஒருவரை யொருவர் பார்ப்பதுமில்லை, பேசுவதுமில்லை. காரணம் என்ன தெரியுமா? நான் ராஜம்பேட்டைக்குப் போயிருந்தபோது இந்த ஊரில் முனிசிபாலிடி எலெக்ஷன் வந்ததாம். அந்த எலெக்ஷனில் எதிர் வீட்டுத்

தாமோதரம் பிள்ளை நின்றாராம். என்மாமனாருடைய இன்னொரு ஜெதேதிரான ராஜாராம் அய்யர் என்பவரும் நின்றாராம். என் மாமனார் ராஜாராம் அய்யருக்காக வேலை செய்தாராம். ஏதோ ஒரு கூட்டத்தில் தாமோதரம் பிள்ளையை 'வெள்ளைக்காரனுக்கு வால் பிடிக்கிறவன்' என்று சொன்னாராம். அதற்காகத் தாமோதரம் பிள்ளை இவரைப் 'பாப்பாரப் புத்தியைக் காட்டி விட்டான்' என்று திட்டி விட்டாராம். இதிலிருந்து சண்டை முற்றி விட்டது. இப்போது இரண்டு குடும்பத்துக்கும் பேச்சு வார்த்தையுமில்லை; போக்குவரத்துமில்லை. முப்பது வருஷமாக் ஜெதேகிகளாக இருந்தவர்கள் இப்போது 'குத்து வெட்டு' என்கிற நிலைமைக்கு வந்துவிட்டார்கள்.

''அடியே, சீதா! வயதானால் புத்தி கெட்டுப் போய் விடுமோடி! முனிசிபாலிடி என்றால் குப்பைத் தொட்டி கூட்டுகிற சமாசாரமாம்! தோட்டிகளை வைத்துத் தெருக் கூட்டும் வேலையைச் சரியாய்ச் செய்வ

---

'முயற்சி புடையார் இகழ்ச்சியடையார்' என்றபடி இந்த நத்தை பெற்ற வெற்றி புகைப்படக் கலைஞரின் வெற்றியாகவுமல்லவா மாறியிருக்கிறது!

நன்றி: வீக்கெண்ட்.

அனுப்பியவர்: ரமண்.



தற்காகத்தான் முனிசிபாலிடியாம்! சம்பளம் கிடையாதாம். இந்தக் குப்பை கூட்டுகிற பதவிக்காக இப்படி இவர்கள் சண்டை போட்டுக் கொள்ள வேண்டுமா என்று ஆச்சரியமாயிருக்கிறது. இதன் காரணமாக எனக்கு இங்கே கிடைத்திருந்த ஒரு சிநேகிதியையும் இழந்து விட்டேன். சற்று நேரம் எதிர் வீட்டுக்குப் போய்ப் பேசிக் கொண்டிருப்பதும் போய் விட்டது. வீடு அசல் சிறைச்சாலை ஆகிவிட்டது.

''என்னுடைய கதை இருக்கட்டும், சீதா! நீ ரஜனிப்பூருக்குப் போனது பற்றிச் சுருக்கமாய் எழுதியிருந்தாய். ஏரியில் விழுந்து ஆபத்தில்லாமல் எழுந்ததாக எழுதியிருந்தாய். ஏதோ தமாஷ் என்று நானும் எண்ணினேன். ஆனால் சூரியா எழுதியிருந்த கடிதத்திலிருந்து உண்மை தெரிந்தது. பெரிய கண்டத்திலிருந்து நீ தப்பிப் பிழைத்தாயாமே? அதென்னடி, உன் அகத்துக்காரர் படகிலே இருந்து விட்டார்? யாரோ தாரிணி என்று ஒருத்தியாம். அவளும் உங்களோடு படகில் வந்தாளாம். அவள்தான் ஏரியில் குதித்து உன்னைக் காப்பாற்றினாளாமே? அவள் மட்டும் இருந்திரா விட்டால் உன்னுடைய கதி என்ன ஆகியிருக்கும்? என்னுடைய கதிதான் என்ன ஆகியிருக்கும்? ஏதோ ஒரு சமயம் எனக்கு நல்ல காலம் பிறக்கும், உன்னோடு கொஞ்ச நாள் தங்கியிருக்கலாம். டில்லி — ஆக்ரா எல்லாம் பார்க்கலாம் — என்று ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிறேன். நீ இப்படியெல்லாம் உன்னை அபாயத்துக்கு உட்படுத்திக் கொள்வது நன்றாயில்லை.

''உன் அகத்துக்காரரை நான் எப்போதாவது பார்க்க நேர்ந்தால், அவரை நன்றாகத் திட்டுவது என்று எண்ணிக் கொண்டிருக்கிறேன். ஆண்பிள்ளைக்கு நீந்தத் தெரிய வேண்டாமா? நீந்தத் தெரியா விட்டாலும் அப்படியா பார்த்துக் கொண்டு படகிலேயே உட்கார்ந்திருப்பது?

''இவரிடம் நேற்றுச் சொன்னபோது ரொம்பவும் வருத்தப்பட்டார். உன் அகத்துக்காரர் பேரில் கோபமும் பட்டார். 'அவனும் ஓர் ஆண்பிள்ளையா?' என்றும் கேட்டு விட்டார். இவர் பேரில் எனக்கு எவ்வளவோ குறை இருக்கிறது. ஆனாலும் அந்த மாதிரி ஆபத்தான நிலைமையில் இவர் சும்மா இருந்திருக்க மாட்டார் என்பது நிச்சயம். சென்ற வருஷம் இந்த ஊர்க் காவேரி வெள்ளத்தில் ஒரு சிறு பெண் முழுகிச் செத்துப்போக இருந்தாளாம். இவர் தைரியமாகக் காவேரியில் குதித்து நீந்திப் போய் அவளைக் கரை சேர்த்து உயிர் பிழைக்கச் செய்தாராம். இந்த விஷயத்தைப் பற்றி இந்தத் தேவப்பட்டணம் முழுவதும் சென்ற வருஷத்தில் பெருமையாகப் பேசிக்கொண்டார்கள். உன் அகத்துக்காரர் அப்படி நடந்து கொண்டதைப் பற்றி எனக்கு உண்மையாகவே கோபமாக இருக்கிறது, சீதா!

''சூரியாவைக் கூட நான் நன்றாகத் திட்டிக் கடிதம் எழுதியிருக்கிறேன். உங்களோடு ஆக்ராவுக்கு வந்தவன் ரஜனிப்பூருக்கு வராமல் எதற்காகத் திரும்பி வரவேண்டும்? அப்படி என்ன தலைபோகிற காரியம் அவனுக்கு? இனிமேல் அப்படியெல்லாம் செய்யக் கூடாது என்றும், உன்னைப் பத்திரமாய்ப் பார்த்துக் கொள்ள வேண்டும் என்றும் எழுதியிருக்கிறேன்.

''சீதா! நீயும் அவனைக் கொஞ்சம் கவனித்துக்கொள். சூரியாவை நினைத்தால் எனக்குப் பரிதாபமாக இருக்கிறது. ஊரை விட்டு, நாட்டை விட்டு, வீடு வாசலை விட்டு, டில்லிப்பட்டணத்துக்குப் போய், நல்ல சாப்பாடு கூடக் கிடைக்காமல் திண்டாடிக் கொண்டிருக்கிறான். ஓர் அதிசயத்தைக் கேள்! என்னிடம் ஏதாவது பணம் இருந்தால் அனுப்பும்படி எழுதியிருக்கிறான். அல்லது என் கணவரிடம் கேட்டு வாங்கியாவது அனுப்பும்படி எழுதி யிருக்கிறான். பணம் வேண்டும் என்று வீட்டுக்கு எழுதவும் மாட்டானாம். அப்பா பணம் அனுப்பினால் பெற்றுக் கொள்ளவும் மாட்டானாம். இந்த மாதிரிப் பிள்ளை எங்காவது உண்டா? கொஞ்சம் சூரியாவை எனக்காகப் பார்த்துக்கொள்.

''குழந்தை வஸந்தி நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வருகிறாள் என்று நம்புகிறேன். சமர்த்தாகப் பேசி விளையாடிக் கொண்டிருக்கிறாளா? வஸந்தி பிள்ளைக் குழந்தையாகப் பிறந்திருந்து எனக்குப் பிறப்பது பெண்ணாக இருக்கக் கூடாதா என்று அடிக்கடி எனக்குத் தோன்றுகிறது. எதற்காக என்று சொல்ல வேண்டுமா? புதிரை நீயே அவிழ்த்துக் கொள்.

உன் பிராண சகி லலிதா''

மேற்கண்ட கடிதத்தைச் சீதா படித்துவிட்டுக் கடிகாரத்தைப் பார்த்தாள். இரவு மணி எட்டரை ஆகியிருந்தது. இன்னும் அவர் ஏன் வரவில்லை? தானும் குழந்தையும் வீட்டில் தனியாக இருக்கிற நாளாகப் பார்த்துத்தானா அவரும் வழக்கத்தை விட நேரம் கழித்து வீட்டுக்கு வரவேண்டும்?

ஆம்; அன்று சீதாவும் குழந்தையும் தன்னந் தனியாக அந்தப் புதுடில்லி வீட்டில் இருந்தார்கள். (தொடரும்)

## அவள் எழுதின அரைகுறைக் கதை (1)

# ஸ்கூட்டர் திருடன்

**ஸ்ரீமதி விஜயா பாலகிருஷ்ணன் எழுதியது :**

அசுர வேகத்தில் ஓடிக் கொண்டிருந்தது அந்த ஸ்கூட்டர். அதில் ஆரோகணித்திருந்த டெரிலின் சட்டை இளைஞனுக்கு இருபத்துநான்கு வயதுக்கு மேலிராது. பால்வடியும் முகம். அவனுக்குப் பின்னால்...(சித்திரக்காரரே! அவசரப்பட்டு ஓர் அஜந்தாக் கொண்டை அழகியை அவன் பின்னால் வரைந்து விடாதேயும். ஏனென்றால் அவனுக்குப் பின்னால் பருவப் பெண் யாரும் அமர்ந்திருக்கவில்லை.) ...குருகுருவென்று வீசின காற்றில் அவன் பீட்டில் கிராப்பு கண்டபடி பறந்ததுடன் கண்களையும் ஒரொரு சமயம் மறைத்தது. (இதிலிருந்து அவன் கறுப்புக் கண்ணாடியைக் கழற்றி வைத்திருந்தான் என்பது தெரிகிறதல்லவா?) ஸ்கூட்டரின் வேகம் அதிகரித்துக் கொண்டே போயிற்று. இல்லாவிட்டால் கதையில் எப்படி 'டெம்போ' பிறக்கும் ?

திடீரென்று என்ன நேர்ந்தது? விபத்து எதுவுமில்லை, ஸ்வாமி! அவன் கதாநாயகி மீது ஸ்கூட்-

("மோட்டார் சைக்கிளை ரிப்பேர் செய்து தருவதாகச் சொல்லி, ரிப்பேர் செய்தபின் அதில் ஏறிக் கம்பி நீட்டிய ஒரு மெக்கானிக்கைப் போலீஸார் தேடி வருகிறார்கள்." 'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்திரிகையில் வெளிவந்த இந்தச் செய்தியைக் கதையாக்க முயன்றார் விஜயா பாலகிருஷ்ணன். என்ன காரணத்தினாலோ கதையை முடிக்கவில்லை! கணவர் ஜி. எஸ். பாலகிருஷ்ணன் முடித்துக் கொள்வார் என்ற நம்பிக்கை போலும்!)



## தாங்க்யூ மிஸ்டர் பிரஸிடெண்ட்!

அமெரிக்க ஜனாதிபதி பத்திரிகை நிருபர்களை வெள்ளை மாளிகையில் அவ்வப்போது சந்தித்துப் பேசுவார். அமெரிக்கப் பத்திரிகை நிருபர்களின் துணிச்சலை உணர்த்தும் நகைச்சுவையான உரையாடலுக்கு ஓர் எடுத்துக்காட்டு இதோ:



நிக்ஸன்: அடுத்த கேள்வியை மிஸ்டர் ராதர் கேட்கட்டும். பார்த்தீர்களா மிஸ்டர் ராதர், உங்கள் பெயர் எனக்கு நினைவிருக்கிறது!

ராதர்: தாங்க்யூ. எனக்கும் உங்கள் பெயர் நினைவிருக்கிறது!

- 29-6-72ல் நிகழ்ந்தது.

★

## லிங்கனுக்கு முட்டாள் பட்டம்!

ஜனாதிபதி லிங்கன் போர்முனையில் தம் படை அணிவகுத்து நிற்பதையும், எதிரிகளையும் காண வந்தார். ஆவலுடன் ஒரு மேட்டில் ஏறி நின்று எதிரிகளைப் பார்வையிடத் தொடங்கினார். எதிர்ப் பக்கமிருந்து உடனே ஒரு துப்பாக்கிக் குண்டு பாய்ந்து வந்தது. கர்னல் ஹோம்ஸ் "முட்டாளே, கீழே இறங்கு!" என்று படபடத்தார். லிங்கனின் கையைப் பற்றி மறைவிடத்துக்கு இழுத்தார். கூடவே



அவரைக் கிலி பிடித்துக் கொண்டது. 'அடடா! பதற்றமடைந்து யோசியாமல் ஜனாதிபதியை அவமரியாதையாகப் பேசி விட்டோமே!' என்ற கவலை அவரை ஆட்கொண்டது.

படைகளைப் பார்வையிட்டு முடிந்து விடைபெறும் போது லிங்கன் அந்த அதிகாரியின் அருகே சென்று, "குட் பை கர்னல் ஹோம்ஸ்! நீர் ஒரு சாதாரண பிரஜையிடம் எப்படிப் பேச வேண்டுமென்று தெரிந்து வைத்திருக்கிறீர்!" என்று புன்னகையுடன் சொல்லி விட்டு நகர்ந்தார்.

-அலெக்ஸாண்டர் வுல்காட்

---

டரை இடிக்கவில்லை...அவள் உடலை ஸ்பரிசிக்கவில்லை. உடம்பில் மின்சாரம் இன்சாரம் எதுவும் பாயவில்லை, இனிப் பாயப்போவதுமில்லை. ஏனென்றால் இது பெண் வாடையே வீசாத கதை!

அந்த இளைஞனின் ஸ்கூட்டர் 'மக்கர்' செய்தது; பிறகு ஒரேயடியாக நகர மறுத்தது. அவனும் என்னென்னவோ தந்திரங்கள் செய்து பார்த்தான். உதைத்தான். வண்டி உறுமி மறுத்தது. இங்குமங்கும் கண்டபடி தட்டிப் பார்த்தான். கல்நெஞ்சம் படைத்த ஸ்கூட்டர் அசையாமல் நின்றது. எதையெல்லாமோ திருகினான்! (கதாசிரியரான எனக்கு ஸ்கூட்டரின் பல்வேறு பாகங்களின் பெயர் தெரியாது!) முயற்சிகள் பலனளிக்காமல் போகவே சோகக் கதைகளில் வரும் கதாநாயகனைப் போல் நீண்ட பெருமூச்சு விட்டான்.

சாலையில் கண்ணுக்கெட்டின வரையில் யாருமில்லை. பக்கத்தில் ஒரு வயல் தெரிந்தது. சற்று அப்பால் ஒரு மூங்கில் பாலம். அதற்குக் கீழ் சுழித்துக் கொண்டு ஓடியது ஒரு சிற்றாறு. தவளைகள் பாட்டிசைத்தனவா, இல்லையா என்று எனக்குத் தெரியாது.

திடீரென்று ஆபத்பாந்தவனாக ஒரு கட்டம் போட்ட வேஷ்டி அவன் முன் தோன்றினான். அவன் கையில் சுத்தி அரிவாளுடன் ஆணி கிணி எல்லாம் இருந்தன.

"என்ன ஸார் டிரபிள்?" என்று இளைஞனை வினவினான் அவன். பிறகு பதிலை எதிர்பார்க்காமல் ரிப்பேர் வேலையில் இறங்கிவிட்டான் அந்தக் கர்மயோகி.

"மிஸ்டர் மிஷ்டேக் இங்கேதான்" என்று எதையோ தொட்டுக் காட்டினான். சுத்தியால், "பய மவனே!" என்று கூறியபடி சக்கரத்தை அடித்தான். வேறு ஏதோ ஒரு பாகத்தைத் திருகினான். உதடுகளுக்கிடையில் ஆணியைச் செருகியபடி விடாது வேலை செய்தான் அவன்.

விட்டானே ஓர் உதை! ஸ்கூட்டர் உயிர் பெற்று உறுமிற்று. இளைஞனைப் பார்த்துக் கண்ணடித்தபடி, "வாத்தியாரே, எப்படி நம்ம வேலை?" என்று வினவினான். மீசையை ஒரு தடவை முறுக்கி விட்டுக் கொண்டான்.

அடுத்தபடியாக அவன் செய்த காரியம் தான் வாசகர்களைத் திகைப்பில் ஆழ்த்தப் போகிறது. ஸ்கூட்டரை ஸ்டார்ட் செய்த பின், "தம்பி! வீட்டுக்குப் பத்திரமாக நேரத் தோடே போய்ச் சேர். இனிமேல் இந்த ஸ்கூட்டரை நீ பார்த்தமாதிரிதான்...டாடா! போய் வருகிறேன். நான்தான் கில்லாடி இசக்கி. ஸ்கூட்டர் திருடுவதுதான் என் தொழில்" என்று கூறிவிட்டுப் பறந்துவிட்டான். அவன் போகும் திசையைப் பார்த்தபடி வாயைப் பிளந்து நின்றான் இளைஞன்.

### ஸ்ரீ ஜி. எஸ். பாலகிருஷ்ணன் எழுதியது:

பின்னால் பறந்து வந்தது ஒரு போலீஸ் ஜீப். அது இளைஞன் பக்கத்தில் நின்றது.

"என்ன தம்பி, இந்த வழியா ஸ்கூட்டரில் யாராவது போனார்களா ? காலேஜிலிருந்து ஸ்கூட்டர் திருடின ஒருவன் இந்த வழியாகப் போனதாகத் தகவல் கிடைத்திருக்கிறது" என்று பேசித் தள்ளினார் ஓர் அதிகாரி.

"இப்பொழுதுதான் ஒரு ஸ்கூட்டர் போயிற்று. சீக்கிரம் போனால் பிடிக்கலாம்" என்றான் இளைஞன்.

போலீஸ் ஜீப் தலை மறைந்தவுடன் அந்த இளைஞன் தனக்குத் தானே பேசிக் கொண்டான் — சபாஷ்டா, ராஜா, சபாஷ்! கடவுள் இந்தத் தடவை ஸ்கூட்டர் திருடன் கில்லாடி ராஜாவைக் காட்டிக் கொடுக்கவில்லை !

# சாதாரண காப்பிகளுக்கு எதிரான புரட்சியில் சேருங்கள்!

வற்புறுத்தி
வாங்குங்கள்
ஒரு ஸ்பெஷல் காப்பி

விசேஷ செறிவு:
விசேஷ நிறம்:
விசேஷ பாக்கிங்:

விலை
ரூ. 2.87
வரிகள் தனி.

புதியது!
'அதி-ஸ்ட்ராங்கான'

# ரிக்கரி®
## இன்ஸ்டன்ட்

இது விசேஷமானது!
நெஸ்கஃபே தயாரிப்பாளர்கள் அளிப்பது




ACIL-R-625 (3) TAM

# உங்கள் கணவர் வேண்டும் பண்டமெல்லாம் உண்டு மகிழட்டுமே!

**ஸான்ஸைம்** மல்ட்டி-யென்ஸைம் காம்பௌண்ட்

## எல்லா வகை உணவுப் பண்டங்களையும் விரைவில் ஜீரணிக்கச் செய்கிறது.



மைகரோன் செய்யப்பட்ட 'ஸான்ஸைம் காம்பௌண்ட்' ஒரே ஒரு பொட்டலம் பவுடர் அல்லது 3 மாத்திரைகள் அஜீரணத் தொல்லைகளிலிருந்து பூரண விடுதலை அளிக்கிறது. உலகெங்கும் பாராட்டு பெற்ற ஜீரணத் தூண்டு கோலான மல்ட்டி-யென்ஸைம் 'ஸான்ஸைம் காம்பௌண்ட்' இன்சுவையும் நன்மணமும் கொண்டது.

'ஸான்ஸைம் காம்பௌண்ட்' 4 சிறந்த வழிகளில் செயல்புரிகிறது.

- 'ஸான்ஸைம் காம்பௌண்ட்' எல்லாவித உணவுப் பொருட்களையும் ஜீரணித்து, சத்துக்களை உட்கிரகிப்பதோடு பசியையும் தூண்டுகிறது.
- 'ஸான்ஸைம் காம்பௌண்ட்டில்' உள்ள 'ஸிமிகோன்' எனும் விசேஷ நுரை எதிர்ப்புப் பொருள் வாயுவை விரைவில் கலைத்து, வலியைப் போக்குகிறது.
- 'ஸான்ஸைம் காம்பௌண்ட்' நொடிப் பொழுதில் அமிலங்களைச் சமனப்படுத்துகிறது.
- 'ஸான்ஸைம் காம்பௌண்ட்' இன்சுவையும் நன்மணமும் கொண்டிருப்பதால் சாப்பிட அருவருப்பு தோன்றுவதில்லை. மேலும் மலச் சிக்கல் ஏற்படாமல் தடுக்கிறது.

**ஜீரண பலமே பூரண நலமாகும்.**

உடனடி நிவாரணத்துக்கு மைகரோன் செய்யப்பட்ட பவுடர் உட்கொள்ளவும். மாத்திரையாகவும் ஸான்ஸைம் கிடைக்கிறது.

சாப்பிடும் அளவு: உணவுக்குப்பின் தண்ணீருடன் அல்லது தாம்பூலத்துடன் சாப்பிடவும் ஒரு பொட்டலம் அல்லது 2 முதல் 4 மாத்திரைகள்.

இலவச விவரமான வெளியீட்டுக்கு எழுதவும்.

'ஸான்ஸைம் காம்பௌண்ட்' எல்லா பிரபல மருந்து கடைகளிலும் கிடைக்கிறது.






யூனி ஸாங்க்யோ லிட்.
22, B. தேசாய் ரோடு, பம்பாய்-26.

PRATIBHA 1711-29 Tam R

*தமிழ்நாட்டிற்கு விநியோகஸ்தர்கள்:*

M/s கணபதி & கோ, 108/104, லிங்கி செட்டித் தெரு, த.பெ. நெ. 1086, சென்னை-1



# கோலாகலமான "கேரோ!"

முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப் பள்ளி. ஸையன்ஸ் பகுதியில் பல மாணவர்கள் ஓர் உபாத்தியாயரை 'கேரோ' செய்து கொண்டிருந்தார்கள். அந்த 'கேரோ'வைக் கண்டு அவர் அதிர்ச்சியடையவில்லை; மாறாக மகிழ்ந்தார். எனவே, இச்செய்தி கட்டாயம் பத்திரிகைகளில் இடம் பெற வேண்டியதுதான்!

மாணவர்கள் வெகு உற்சாகமாக அவரைச் சூழ்ந்து பல கேள்விக் கணைகளைத் தொடுத்துக் கொண்டிருந்தார்கள். இத்தனை கேள்விகளுக்கும் அவர் இன்முகத்துடன் விடை பகர்ந்து கொண்டிருந்தார். ஒரே கோலாகலம்தான்!

அவர்தான் புதுக்கோட்டை ஸ்ரீ சுந்தரேசபிள்ளை. ஆசிரியப் பயிற்சி பெற்ற பட்டதாரி. பல கல்வி நிலையங்களில் முப்பது ஆண்டுகளுக்கும் மேலாக ஆசிரியப் பணி புரிந்துவிட்டு இவ்வாண்டு ஓய்வுபெற்று ஊர் திரும்புகிறவர்.

ஸ்ரீ சுந்தரேச பிள்ளை எந்தக் கல்வியும் ஏட்டுச் சுரைக்காயாக இருக்கக் கூடாது; செய்முறை அறிவு புகட்டுவதாக அமைய வேண்டும் என்ற நோக்கம் கொண்டவர். எனவே, மாணவர்களுக்கு விளையாட்டாகப் பல விஞ்ஞானப் பொருள்கள் செய்யும் வித்தையைப் புகட்டி வருகிறார்.

'சிறு துரும்பும் பல் குத்த உதவும்' என்பது வெறும் பழமொழி என்று இதுகாறும் எண்ணிக் கொண்டிருப்பவர்களுக்கு, அது பழக்கத்தில் உள்ள பொருள் பொதிந்த பழமொழிதான் என்பதை எடுத்துக்காட்டும் முறையில் அவர் முயற்சிகள் அமைந்துள்ளன.



இனி வேண்டாமென்று நாம் விட்டெறிந்து விட்ட தகர டப்பா, முனை மழுங்கிவிட்ட பிளேட், எரிந்து தீர்ந்த பாட்டரிகள் எல்லாமே, இவருக்கு விஞ்ஞானக் கல்வி புகட்ட உதவுகின்றன. வெறும் தகரம், மாடல் மின்சார மோட்டாராகிறது. அரை பிளேடும் நெட்டியும் 'பாலன்ஸ்' (தராசு) ஆகின்றன. பாட்டரிக்குள் உள்ள கார்பன் குச்சியோ 'ஆர்க் லாம்ப்' ஆகிறது. அட்டைகள் 'புரொஜக்டர்' ஆகின்றன. இவரது போதனை முறை, மாணவர்களின் கைவண்ணம் இரண்டும் சேர்ந்து, ஆர்வமுள்ள மாணவனை வருங்கால விஞ்ஞான மேதையாக்க அடிக்கல் நாட்டுகின்றன.

ஆர்வம் மிக்க சிறுவன் ஒருவன், தகரத்தைக் கொண்டு மாடல் மின்சார மோட்டார் செய்து, 'காயில்'கள் கணக்காகச் சுற்றிப் பாட்டரியின் உதவி கொண்டு இயக்கிக் காட்ட முனைந்தான். ஆரம்பத்தில் அது மக்கர் செய்தது. அப்போது அவன் முகம் போன போக்கைச் சொல்லி முடியாது. கை பரபரத்ததை எப்படி எழுத்தில் வடிப்பது? அதேபோல அவன் முனைப்பால் அது இயங்கியபோது அவன் முகத்தில் தோன்றிய மகிழ்ச்சியும் எழுத்துக்குள் அடங்காததுதான்! கரங்குவித்து அவன் கண்ணுக்குப் புலனாகாத கடவுளை நினைத்த பொழுது...? விஞ்ஞானக் கல்வியோடு மெய்ஞ்ஞானக் கல்வியும் பெறுவதாகத் தோன்றியது!

தீர்ந்து போன பாட்டரியிலிருந்து கார்பன் குச்சிகளை எடுத்து, 'ஆர்க் லாம்ப்' செய்தவர் அதைப் பொருத்திக் காட்டியபொழுது கண்களைக் கூசியது. அப்படியே உள்ளத்தில் ஓர் ஒளியும் பளிச்சிட்டது. சொல் முறையோடு செய்முறையை இணைத்துப் பாடம் நடத்தினால் படிப்புக்குப் படிப்பு, அறிவுக்கு அறிவு, மகிழ்ச்சிக்கு மகிழ்ச்சி எல்லாம் தாமாகவே கிட்டும் என்று தெரிந்தது.

இந்த உயர்நிலைப் பள்ளியின் கணித ஆசிரியர் ஸ்ரீ பி. கே. ஸ்ரீநிவாசன். மூன்று நாட்கள் தம் பள்ளியில் விஞ்ஞானக் காட்சியை ஏற்பாடு செய்ய முயற்சி எடுத்துக் கொண்ட பெருமை அவரையே சாரும். கணக்கு என்றால் காததூரம் ஓடும் மாணவர்களும் ஸ்ரீநிவாசன் என்றால் சூழ்ந்து கொள்ளுகிறார்கள். கணக்கைக் கணக்காகச் சொல்லிக் கொடுக்காமல் கனிரசக் கதையாகப் புகட்டுவதில் தேர்ந்தவர் அவர். கணித மேதை ராமானுஜத்தின் நினைவாகத் தமது பள்ளியில் 'எண் நண்பர் கழக'மும் ஸ்ரீ சி. வி. ராமன் பெயரால் 'ஸையன்ஸ் கிளப்'பும் இயங்கி வருவதில் அவர் பெருமகிழ்ச்சி கொண்டுள்ளார். ஆசிரியர் பரிமாற்றத் திட்டத்தின் கீழ் மேல் நாட்டுக்குச் சென்றபோது தமது நடை உடை பாவனையில் மாற்றத்துக்கு இடம் கொடாத தைரியசாலி. ''சிறார்களுக்குப் போதிப்பதில் உள்ள ஆனந்தம் வேறு எதிலும் இல்லை'' என்கிறார்.

— ரா. வீ.

# சத்திய வெள்ளம்

## அத்தியாயம் 3

சுதந்திர தினத்தை அடுத்து வந்த இரண்டு விடுமுறை நாட்களும் பிரசாரத்திலும், ஒவ்வொரு விடுதியாகப் போய் மாணவர்களைச் சந்திப்பதிலும் அண்ணாச்சி கடைக்கு எதிரே பொதுக் கூட்டம் போட்டுப் பேசுவதிலும் கழிந்து விட்டன. தலைவனும், பேரவைச் செயலாளனும் ஒத்த நோக்கு உடையவர்களாக இருந்தால்தான் பல்கலைக் கழகத்தில் பல காரியங்களைச் சாதிக்க முடியும்



நா. பார்த்தசாரதி

என்பதால் பாண்டியன் ஓட்டுக் கேட்கும் போது மோகன்தாஸுக்கும் மோகன்தாஸ் ஓட்டுக் கேட்கும்போது பாண்டியனுக்கும் சேர்த்தே கேட்டார்கள். பல்கலைக்கழக எல்லைக்குள் மாணவர் பேரவைத் தலைவர், செயலாளர் தேர்தல் சம்பந்தமாக எந்தக் கூட்டமும் நடத்தக் கூடாது என்று ரிஜிஸ்திரார் சுற்றறிக்கை அனுப்பி விட்டதனால் இரு தரப்பு மாணவர்களுமே வெளியேதான் கூட்டம் போட்டுப் பேசியாக வேண்டியிருந்தது. இவர்கள் இந்த வாயிலில் அண்ணாச்சி கடையருகே கூட்டம் போட்டார்கள் என்றால் அவர்கள் அந்த வாயிலில் 'ஹில் டாப் டிரைகிளீனர்ஸ்' அருகே கூட்டம் போட்டார்கள். மாணவர்களின் ஆர்வத்தையும் கூட்டத்தையும் பார்த்தால் பாண்டியனும் மோகன்தாஸும் அமோகமாக வெற்றி அடைந்து விடுவார்கள் என்று தெரிந்தது.

''இந்தத் தேர்தலை நடக்க விடாமல் பண்ணினாலும் பண்ணுவேனே ஒழிய அந்தப் பயல்களை ஜெயிக்க விட மாட்டேன்'' என்று அன்பரசன் கறுவிக் கொண்டிருப்பதாகப் பாண்டியன் காதுக்குத் தகவல் எட்டியது. முதலில் இது சும்மா வேடிக்கைக்காகச் சொல்லப்படுகிறது என்றுதான் பாண்டியனும் மோகன்தாஸும் நினைத்தார்கள். ஆனால் திங்கள்கிழமை மாலையில் அவர்கள் அண்ணாச்சி கடைக்குப் போனபோது அண்ணாச்சியே அதை உறுதிப்படுத்தினார்.

''தம்பி! கோட்டச் செயலாளர் மினிஸ்டருக்கு ஃபோன் பண்ணி மினிஸ்டர் 'லெவல்லே' வி. சி.க்குப் பிரஷர்

கொடுக்கிறாங்க. 'தேர்தல் நடந்தால் பல்கலைக் கழக எல்லையிலே அமைதியும் ஒழுங்கும் குலையும்'னு காரணம் சொல்லித் தேர்தலையே ஒத்திப் போட ஏற்பாடு நடக்குது.''

''சும்மா ரூமரா? அல்லது நம்பலாமா? இது உங்களுக்கு எப்படித் தெரிஞ்சுது அண்ணாச்சி?''

அண்ணாச்சி சுற்று முற்றும் பார்த்து விட்டுத் தணிந்த குரலில் மறுமொழி சொன்னார்:

''மந்திரி வி. சி. கிட்டவும், ஆர்.டி.ஓ. கிட்டவும் பேசினதைக் கேட்ட ஒருத்தரே வந்து சொன்னாரு. டெலிபோன் எக்சேஞ்சிலே நம்ம ஆளுங்க நிறைய இருக்காங்க தம்பீ! ஆனா இதை நீங்க வெளியிலே காட்டிக்கிட வேண்டாம்... அவுங்க வாயாலேயே வரட்டும். அப்புறம் பார்த்துக்கலாம்.''





''இந்த வி. சி. கோட்டச் செயலாளருக்கே நடுங்குவார்! மந்திரியே ஃபோன் பண்ணி விட்டால் கேட்கணுமா?'' என்று கொதிப்போடு சொன்னான் மோகன்தாஸ்.

''இன்னிக்குச் சாயங்காலம் 'கண்ணு' வரேன்னிச்சு. இன்னும் காணலியே?'' என்று பாண்டியனைப் பார்த்துச் சொன்னார் அண்ணாச்சி.

''நான்கூடப் பார்த்து ரெண்டு நாளாச்சு அண்ணாச்சி. அவுங்க ஹாஸ்டல்லே அது நல்லா உழைச்சு நமக்காக ஒருத்தர் விடாமக் 'கான்வாஸ்' பண்ணிச் சொல்லியிருக்குன்னு கேள்விப் பட்டேன்.''

''யாருதான் நல்லாக் கான்வாஸ் பண்ணலே? எட்டாயிரத்துச் சொச்சம் பேருலே ஏழாயிரம் பேர் நமக்கு ஆதரவா இருப்பாங்கங்கிறது உறுதி. யாருமே 'கான்வாஸ்' பண்ணாட்டியும் இது உறுதி. ஆனால் பாவிங்க எதுவுமே நடக்காமப் பண்ணிடுவாங்க போலே இருக்கே....? ஒரே அக்ரமமாவில்லே இருக்கு?'' என்று அண்ணாச்சி சொல்லிக் கொண்டிருந்த போதே சைக்கிள்

கடைக்கு எதிர்ப்புறத்து மருந்துக் கடையிலிருந்து.

''அண்ணாச்சி! ஃபோன் வந்திருக்கு, வாங்க'' என்று குரல் கொடுத்தார்கள். அண்ணாச்சி எழுந்து விரைந்தார். ''நீ கவலைப்படாதே பாண்டியன்! எது வந்தாலும் ஒரு கை பார்த்து விடலாம். மாணவர்களை ஏதோ கிள்ளுக் கீரை என்று நினைக்கிறார்கள். தேர்தலை நிறுத்தினால் கூட்டமாக வி. சி. வீட்டுக்கு ஊர்வலம் போகலாம். அப்புறம் தானே வழிக்கு வருவார்.''

''அமைதியாக நடந்து முடிய வேண்டிய விஷயத்தை அவர்களே பெரிதாக்கி விடுவார்கள் போலிருக்கிறது. பல்கலைக் கழகத்தின் அமைதியை நாமாகக் கெடுக்க விரும்பவில்லை. ஒரு 'சேலஞ்ச்' என்று வந்தால் நாமும் விடக் கூடாது'' என்று பாண்டியன் மோகன் தாஸுக்குப் பதில் சொல்லிக் கொண்டிருக்கும்போது அண்ணாச்சி திரும்பி வந்தார்.

''பார்த்தீங்களா தம்பீ! நான் சொன்னது சரியாய்ப் போச்சு. கண்ணு ஃபோன் பண்ணிச்சு. லேடீஸ் ஹாஸ்டல்லேருந்து ஒரு வாரத்துக்கு யாரும் வெளியே நடமாடக் கூடாதுன்னு நோட்டீஸ் ஒட்டி யிருக்காங்களாம். 'வர முடியல்லே மன்னிச்சுக்குங் கன்னு' அந்தத் தங்கச்சி சொல்லுது. தம்பீ, பாண்டியன்! உங்க கிட்டவும் சொல்லச் சொல்லிச்சு.'' — மோகன் தாஸ் உடனே சொன்னான்:

''நீங்க சொன்னது சரிதான் அண்ணாச்சி! ஏதாவது கோளாறுன்னு முதல்லே லேடீஸ் ஹாஸ்டல் நோட்டீஸ் போர்டுலேதான் ரிஜிஸ்ட்ராரோட சுற்றறிக் கையை ஒட்டுவாங்க.''

அப்போது ஓர் ஆள் சைக்கிள் வாடகைக்கு எடுக்க வந்து சேர்ந்தான். குண்டாகவும் குள்ளமாகவும் அந்தக் குறைந்த உயரத்துக்கு ஒரு சிறிதும் பொருந்தாமல் வேஷ்டியளவுக்கு நீளமாகத் தோளில் தொங்கும் பெரிய துண்டோடும் பார்க்க விநோதமாகத் தோன்றினான் அந்த ஆள். அவன் நடந்து வருவதே உருண்டு வருவது போலிருந்தது. துண்டைப் பார்த்ததுமே அண்ணாச்சி, பாண்டியன், மோகன்தாஸ் மூவரும் ஒருவருக்கொருவர் குறிப்பாக நோக்கிச் சிரித்துக் கொண்டனர்.





''அண்ணாச்சி! சைக்கிள் வேணுமே?''

''எங்கே போகணும்? சொல்லுங்க.''

'' அதை அவசியம் சொல்லணுமோ ?''

''ஆமாம். சொல்லணும். முனிசிபல் எல்லைக்குள்ளேதான் சைக்கிள் வாடகைக்குத் தரலாம். நீங்க பாட்டுக்குக் காடு மேடெல்லாம் சுத்தறதுன்னு இங்கே சைக்கிள் கிடைக்காது.''

''நான் கோட்டச் செயலாளருக்குக் கார் வழங்குற நிதி வசூலுக்குப் பொருளாளன். உள்ளூர் முனிசிபல் கவுன்சிலர் காளிமுத்து.''

''எனக்குத் தெரியும்.''

''தெரிஞ்சுதான் சைக்கிள் தரமாட்டேங்கிறீங்களா?''

''சொந்தமா மோட்டார் சைக்கிளே வைச்சிருக்கீங்களே, ஏன் சைக்கிளுக்கு அலையறீங்க...?''

''சைக்கிள் கிடக்கட்டும்! சைக்கிள் செயினாவது வாடகைக்குத் தருவீங்களா?''

''அதுக்கு வேறே இடம் பாருங்க.''

'' பார்க்கிறேன் ! பார்க்கிறேன் !'' என்று கத்திவிட்டுப் போகிற போக்கில் அண்ணாச்சி கடை வாசலில் இருந்த கொடிக் கம்பத்தின்மேல் காறித் துப்பி விட்டுப் போனான் அந்தக் குண்டன்.

''தம்பீ! ஒரு பெரிய கலகத்துக்கு ஏற்பாடு நடக்குது. ஒற்றுமையா இருந்து சமாளிக்க வேண்டும்.''

பாண்டியனும், மோகன்தாஸூம் அண்ணாச்சியின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தார்கள்.

''இவன் சைக்கிள் கேட்க வரலே, தம்பீ! வேவு பார்க்க வந்திட்டுப் போறான்.''

அண்ணாச்சியின் அனுமானம் சரி என்றே அவர்களுக்கும் தோன்றியது. வேறு பனியன் போடாத காரணத்தால் பனியனைப் போல் உடம்போடு ஒட்டியதும் சன்னமாயில்லாத முரட்டுக் கதரில் முக்கால் கை வைத்துத் தைத்ததுமாகிய சட்டையைக் கழற்றி எறிந்து விட்டுத் தோளிலும் நெஞ்சிலும் திரண்ட செழுமையான சதைப் பிடிப்புக்கள் மின்ன அண்ணாச்சி பின் பக்கம் சிலம்பக் கூடத்துக்குள் நுழைந்தார்.

''தம்பீ! நீங்களும் வாங்க'' என்று அவர்களையும் அழைத்தார். பாண்டியனும் மோகன்தாஸூம், பின்பக்கத்து அறையில் சட்டை பனியன் களைக் கழற்றிவிட்டு அண்ணாச்சியோடு உள்ளே சென்றார்கள். ஓர் அரை மணிக்கு மேல் கம்பு சுற்றி விளையாடினார்கள் அவர்கள். அப்போது இன்னும் சில மாணவர்களும் தனித் தனியாகவும், குழுக்களாகவும் வந்து சேர்ந்து கொண்டார்கள். மெல்ல மெல்ல இருட்டிக் கொண்டு வந்தது.

மாலை மணி ஆறரை ஆனவுடன் கம்பு சுற்றுவதை விட்டு விட்டு எல்லாரும் உள்ளே வந்தார்கள். தேர்தல் நிறுத்தப்பட்டுக் கலகங்கள் நடந்தாலும் நடக்கும் என்ற சந்தேகத்தையும் அது தொடர்பான எச்சரிக்கையையும் மீண்டும் எல்லா மாணவர்களிடமும் தெரிவித்தார் அண்ணாச்சி. சில மாணவர்கள் உடனே உணர்ச்சி வசப்பட்டு ஆத்திரமடைந்தார்கள். சிலர் தாங்கள் மேற்கொண்டு எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பது பற்றிச் சிந்திக்கத் தொடங்கினார்கள். செய்தியை எப்படியும் எல்லாப் பிரிவு மாணவர்களுக்கும், எல்லா விடுதிகளுக்கும் தெரிவித்து வைத்து முன்னெச்சரிக்கையாக இருப்பது என்று பேசி வைத்துக் கொண்டார்கள் அவர்கள். அவர்களில் ஒருவன் சிறிது சோர்வோடு,

''இந்த வம்பை எல்லாம் பார்த்தால் பேசாமல் படிப்பு உண்டு நாம் உண்டு என்று இருந்து விடலாம் போல் தோன்றுகிறது. மாணவர் பேரவைக்கு யார் வந்தால் நமக்கு என்ன?'' என்று அலுத்துக் கொள்ளத் தொடங்கினான். உடனே பாண்டியன் முந்திக் கொண்டு அவனுக்குச் சுடச்சுடப் பதில் சொன்னான்:

''நேற்றைய மாணவன் ஒருவேளை அப்படி இருந்திருக்கலாம். தன் சொந்த எதிர்காலத்தைப் பற்றி மட்டுமே கவலைப்பட்டிருக்கலாம். ஆனால் இன்றைய மாணவன் அப்படி இருக்க முடியாது. அவன் நாட்டின் எதிர்காலத்தைப் பற்றியும் தன்னைச் சுற்றி இருப்பவர்களைப் பற்றியும் கூடக் கவலைப்பட வேண்டியிருக்கிறது; சிந்திக்க வேண்டியிருக்கிறது. தன் எதிர்காலம் நாட்டின் எதிர் காலத்தையும் அதன் கோடிக் கணக்கான மக்களின் எதிர் காலத்தையும் பொறுத்ததாக இருக்கிறது என்பதையும் புரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது.''

''புரிந்து கொள்ள வேண்டியதுதான். ஆனால் நாம் படிக்க வந்திருக்கிறோம். புத்தகங்களால் புரிந்து கொள்ள வேண்டியதை மல்யுத்தம் செய்தா புரிந்து கொள்ள முடியும்?''

''அவசியம் நேர்ந்தால் அப்படியும் தான் புரிந்து கொள்ள வேண்டியிருக்கும். 'தோளை வலியுடையதாக்கி உடற் சோர்வும் பிணி பலவும் போக்கி அரிவாளைக் கொண்டு பிளந்தாலும் கட்டுமாறு உடலுறுதி' வேண்டும் என்று

# அஜாக்ஸ் உப்புத்தாள்

## வேலையை துரிதமாக முடிக்கிறது. அதனல் பணச் செலவும், நேரமும், உழைப்பும் குறைகிறது.



- சிறந்த முறையில் தயாரிக்கப்படுவதால் ஒரு சிறு துண்டும் பல நாட்களுக்கு நீடித்து வரும்.
- அஜாக்ஸ் உப்புத்தாளின் மேல்பூச்சு ஒரே சீராய் இருப்பதால் பொருள்களை மழமழப்பாக்குவது வெகு சுலபம்.
- அஜாக்ஸ் உப்புத்தாள் வேலையை துரிதமாக முடிப்பதால் காசும் மிச்சம், வேலையும் மிச்சம்.
- எந்த வேலைக்கும் ஏற்றதோர் அஜாக்ஸ் உப்புத்தாள் உண்டு.




# அஜாக்ஸ்

உப்புத்தாள்கள் தரத்தில் A-1






கார்போரண்டம் யுனிவர்சல் லிமிடெட்,
சென்னை - கல்கத்தா - பம்பாய் - புது டில்லி

பல்வேறு தொழில்களுக்கும் ஆதாரக் கருவிகளை தயாரித்து அளிப்பதையே தன் பணியாகக்கொண்ட ஸ்தாபனம்

Bensons-1874 TAM



**ஸ்ரீமதி ராஜம்மாள்**

தோற்றம் : 4-4-1910 மறைவு : 5-7-1972

பரிதாபி வருஷம் ஆனி மாதம் 22ம் தேதி (5—7—1972) புதன்கிழமை பகல் 1-15 மணிக்கு ஓய்வுபெற்ற வருமான வரி இலாகா சூபர்வைசர் அவர்கள் தர்ம பத்தினியும், வருமான வரி இலாகா உதவி கமிஷனர் ஸ்ரீ V. K. ஜெயராமன், ஸ்ரீ V.K. நரசிம்மன், ஸ்ரீ V.K.. பலராமன் அவர்களின் தாயாருமான ஸ்ரீமதி ராஜம்மாள் சென்னை, நுங்கம்பாக்கத்தில் சிவலோக பிராப்தி அடைந்தார். அன்னாருடைய மூன்று பிள்ளைகளும், ஐந்து பெண்கள், ஐந்து மருமகன்மார்கள், பேரன்கள், பேத்திகள் மீளாத் துயரத்தில் ஆழ்ந்துள்ளார்கள்.

# மூல நோயை

முற்றவிடாமல் நம்பிக்கையான

# ஹைடன்ஸா

களிம்பு உபயோகித்து நிவாரணம் அடையுங்கள்;

—ரண சிகிச்சையையும் தடுங்கள்

Bensons-2141 TAM

பசியைப் பெருக்குவதோடு நின்றுவிடும் எந்த டானிக்கும் பாதிவேலையைத்தான் செய்யும்

*

# இன்க்ரிமின் பெறுவீர்..

## உண்ணும் மிகையான உணவை ஓங்கிய வளர்ச்சியாக மாற்றும்

*

**சேருவீர் இன்க்ரிமின் இதத்தோடு... வளர்ச்சிக்கான பசியைப் பெறுவீர் வாழ்வுடனே!**

பசியைப் பெருக்குவதோடு மட்டுமின்றி, உண்ணும் மிகையான உணவை ஓங்கிய வளர்ச்சியாக மாற்றுகிறது இன்க்ரிமின் டானிக். காரணம், உங்கள் குழந்தை சாப்பிடும் புரதச் சத்துக்களை மேம்படப் பயன்படுத்திக்கொள்ளும் அதிமுக்கியமான அமினோ அமிலம் அதில் அடங்கியுள்ளது.

◀ பெரிய குழந்தைகளுக்கு இரும்புச் சத்து அடங்கிய இன்க்ரிமின் ஸிரப் — 175 மிலி & 57 மிலி. இளங் குழந்தைகளுக்கு இன்க்ரிமின் டிராப்ஸ் — 10 மிலி.




# இன்க்ரிமின்*

டானிக் எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கின்றன.

* அமெரிக்கன் ஸயானமிட் கம்பெனியின் ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க்.

Lederle

லின்டாஸ்-INC, 22 - 140 TM

பாரதியார் நமக்காகத்தான் சொல்லி வைத்திருக்கிறார்."

"அரிவாளைக் கொண்டு பிளக்கும் காலம் போய்விட்டது தம்பி! இது சைக்கிள் செயின் காலம்!" என்று குறுக்கிட்டுச் சொன்னார் அண்ணாச்சி. பாண்டியனும் மோகன்தாஸும் ஒருவரை யொருவர் பார்த்துப் புன்னகை புரிந்து கொண்டார்கள்.

"ஆண்டு கொண்டிருப்பவர்கள் பஞ்சாயத்து போர்டிலிருந்து பல்கலைக் கழக யூனியன் வரை எதிலும் தங்கள் ஆட்களே ஜெயிக்க வேண்டும் என்று வெறி பிடித்து அலைகிறார்கள். தாங்கள் ஜெயிக்க முடியாதது போல் இருந்தால் தேர்தல்களையே நடக்கவிடாமல் செய்யவும் அவர்கள் தயங்குவதில்லை. இந்தச் சூழ்நிலையிலிருந்து மீள்வது நாமும் நம் தரப்பைச் சேர்ந்த மாணவர்களும் எந்த அளவு ஒற்றுமையாக இருக்கிறோம் என்பதைப் பொறுத்துத்தான் இருக்கிறது" என்று அண்ணாச்சி கடையிலிருந்து புறப்படுமுன் எல்லாருக்கும் பொதுவாக மோகன்தாஸ் ஓர் எச்சரிக்கை செய்தான்.

எந்த முக்கியமான அவசரத் தகவலைப் பல்கலைக் கழகத்திலிருந்து உடனே தமக்குத் தெரிவிக்க வேண்டியிருந்தாலும் எதிர்ப் பக்கத்து மருந்துக் கடைக்கு ஃபோன் செய்யும்படி பாண்டியனை வேண்டிக் கொண்டார் அண்ணாச்சி.

மோகன்தாஸும், பாண்டியனும் அண்ணாச்சி கடையிலிருந்து திரும்பும் போதே உணவு விடுதி மணி அடித்து விட்டது. அந்த முன்னிரவு வேளையில் பல்கலைக் கழகக் கட்டிடங்களும் புல்வெளிகளும், விடுதிகளும், பூங்காக்களும் வழக்கத்தை மீறிய அமைதியோடிருந்தன. ஓர் அமைதியின்மைக்கு முன்னால் நிலவும் தாற்காலிக அமைதியாகவோ அல்லது ஒரு கலவரத்தை எதிர்பார்த்து அவாவி நிற்கும் அமைதியாகவோ அது தோன்றியதே தவிர இயல்பான அமைதியாகத் தெரியவில்லை. வழக்கமாக அந்த வேளையில் பெண்கள் விடுதிக்கு முன்னிருந்த பூங்காவில் சிரிப்பொலியும், வளை ஒலியும், பேச்சுக்களுமாக நிறைய மாணவிகள் தென்படுவார்கள். சிலர் மாணவர்களோடு தனியே பேசிக் கொண்டிருப்பார்கள். புல்வெளிகளின் பிற பகுதிகளிலும், நீச்சல் குளத்தருகிலும் கூட மாணவர்கள் கூட்டம் கூட்டமாகவும், இருவர் மூவராகவும், தனியாகவும் காணப்படுவார்கள். அன்று அத்தனையிலும் ஒரு மாறுதல் தெரிந்தது. மரங்களும், பூங்காக்களும், புல்வெளியும், கட்டிடங்களும் மஞ்சு சூழ்ந்து மங்கித் தெரிந்தன. மஞ்சு படிந்து மங்கிய மலைச் சரிவில் மின் விளக்குகள் கூடத் தளர்ந்து உறங்குவனபோல் தோன்றின. சில பெரிய மரங்களின் கீழே விளக்குக் கம்பத்தடியில் அமர்ந்து கருமமே கண்ணாகப் படிக்கும் மாணவர்களைக் கூட இன்று காணவில்லை. 'போட் ஹவுஸ்' அருகே கூட வெறிச்சிட்டுக் கிடந்தது. —

"அண்ணாச்சி சொன்னது சரிதான்! நிலைமை ஒரு தினுசாகவே இருக்கிறது" என்று பாண்டியன் மோகன்தாஸிடம் சொன்னான். இருவரும் அறைக்குப் போய்விட்டுத்தான் உணவு விடுதிக்குச் சென்றார்கள்.

அங்கே உணவு விடுதியிலும் அதே சூழ்நிலை நிலவியது. பல மாணவர்கள் தாங்கள் கேள்விப்பட்டதைத் தனியாகவும் கூட்டமாகவும் சிறு சிறு குழுக்களாகவும் பாண்டியனிடம் வந்து தெரிவித்தனர். திரும்பும்போது மெஸ் வாயில் வரையிலும் பல மாணவர்கள் சுற்றிச் சுற்றி நின்று பேசிக் கொண்டு வந்தார்கள்.

**சத்திய வெள்ளம்**

நேற்றைய மாணவன் ஒருவேளை தன் சொந்த எதிர்காலத்தைப் பற்றி மட்டுமே கவலைப்பட்டிருக்கலாம். ஆனால் இன்றைய மாணவன் அப்படி இருக்க முடியாது. அவன் நாட்டின் எதிர்காலத்தைப் பற்றியும் தன்னைச் சுற்றி இருப்பவர்களைப் பற்றியும்கூடக் கவலைப்படவேண்டியிருக்கிறது.

மீண்டும் பாண்டியன் அறைக்குத் திரும்பும்போது இரவு மணி எட்டரைக்கு மேலாகி யிருந்தது. முன்பே உணவு விடுதியிலிருந்து திரும்பியிருந்த அறை நண்பன் பொன்னையா, "உங்களுக்கு ரெண்டு மூன்று தடவை போன் வந்தது. லேடீஸ் ஹாஸ்டலிலிருந்து யாரோ கூப்பிட்டார்கள். மறுபடியும் கூப்பிடச் சொல்லியிருக்கிறேன்" என்று பாண்டியனிடம் தெரிவித்தான். 'வேறு அறை மாணவன் யாராவது ஃபோனை எடுத்துத் தன்னை வந்து கூப்பிடும்படி விடவேண்டாம்' என்று ஹாஸ்டல் மாடி வராந்தாவில் ஒரு கோடியிலிருந்த கண்ணாடி அடைப்புக்களாலாகிய டெலிபோன் பூத் அருகேயே போய் நின்று

கொண்டான் பாண்டியன். விடுதி அறைகளின் ஒவ்வொரு சிறகின் இறுதியிலும் இப்படி டெலிபோன் வசதி இருந்தது. ஆனால் இந்த ஃபோன்களிலிருந்து பல்கலைக் கழக எல்லைக்குள்மட்டும்தான் பேசவும் கேட்கவும் முடியும். வெளியே நகருக்குள் பேச வேண்டுமானால் வார்டன் அறைக்குப் போக வேண்டும் 'சென்ற ஆண்டு பெரிய தொல்லையாக இருக்கிறது' என்று இந்த ஃபோன் இணைப்புக்களையெல்லாம் எடுத்துவிட ரிஜிஸ்திரார் முனைந்தபோது மாணவர்கள் போராடி வெற்றி பெற்றதை நினைத்துக் கொண்டான் பாண்டியன். வரப் போகிற ஃபோனை எண்ணி ஆவலும், களிப்பும் நிறைந்த மனத்தோடு காத்திருந்தான் அவன். எதிர்பார்த்துக் காத்திருந்த அழைப்பு வருவதற்குத் தாமதம் ஆக ஆக அவன் ஆவலும் பரபரப்பும் அதிகமாயின. காத்திராதபோது மிகவும் சாதாரணமான ஒன்றுகூட அதை எதிர்பார்த்துக் காத்திருக்கும்போது மிகப் பெரிதாகி விடுகிறது. எதற்காகக் காத்திருக்கிறோமோ அதைப் பற்றிய ஆவல்களும், கவலைகளும், கற்பனைகளும் பெரிதாகிவிடுகின்றன. கால் மணி நேரத்துக்கு மேல் அவன் மனத்தை அலைபாய விட்ட பின் அந்த அழைப்பு வந்தது. டெலிபோன் கூண்டுக்குள் நுழைந்து கதவை உட்பக்கமாக அடைத்துக்கொண்டு ஃபோனை எடுத்தான் அவன். அவனுடைய பெயரையும், அறை எண்ணையும் குறிப்பிட்டுக் கண்ணுக்கினியாளின் குரல் விசாரித்தது.

'' நான் பாண்டியன்தான் பேசுகிறேன்'' என்று அவன் கூறிய பின்பே அவள் மேலே சொல்ல வேண்டியதைச் சொல்லத் தொடங்கினாள்.

''உங்களை நாலாவது தடவையாக இப்போது கூப்பிடுகிறேன். நல்ல வேளையாக இப்போதாவது கிடைத்தீர்கள். நான் கேள்விப்பட்டது உண்மைதானா? சாயங்காலம் நான் அண்ணாச்சி கடைக்கு ஃபோன் செய்து விசாரித்தபோதுகூட அவர் சொல்லவில்லையே? சற்று நேரத்துக்கு முன் நானும் தோழிகளும் மெஸ்ஸுக்குச் சாப்பிடப் போனபோதுதான் அங்கே இதைக் கேள்விப்பட்டேன். நீங்கள் பேரவைச் செயலாளர் பதவிக்குப் போட்டியிடுவதிலிருந்து விலகிக் கொண்டு விட்டீர்களாமே...ஏன் அப்படிச் செய்தீர்கள்?''

''நான்சென்ஸ்... யார் சொன்னார்கள் அப்படி? யாரோ புரளி கிளப்பி ஏமாற்றுகிறார்கள். இந்தத் தேர்தல் நடந்து முடிகிறவரை இப்படி இன்னும் எத்தனையோ புரளிகளைக் கிளப்பிவிடுவார்கள். விழிப்பாயிருந்து எது பொய், எது நிஜம் என்று கண்டு கொள்கிற திராணி இல்லா விட்டால் நமக்குள்ளேயே ஒற்றுமைக் குறைவு ஏற்பட்டு விடும்.''

''இப்போதே அப்படி ஆகிவிட்டது. மெஸ்ஸில் எவளோ ஒருத்தி இப்படிப் புரளி பண்ணியதும் நான் உங்களுக்காக ஓட்டுக்குச் சொல்லி வைத்திருந்த என் தோழிகள் ஒவ்வொருவராக என்னிடம் வந்து 'இப்படி உடனே வித்ட்ரா பண்ணிட்டு ஓடற ஆளுக்கா ஓட்டுக் கேட்டே?'ன்னு என்னோடு சண்டைக்கே வந்து விட்டார்கள்.''

''சி. அன்பரசனும், வெற்றிச் செல்வனும் தோல்விக்குப் பயந்து ஊரை விட்டே ஓடிப் போய் விட்டாங்கன்னு நீங்க பதிலுக்கு ஒரு புரளியைக் கிளப்பினால் எல்லாம் சரியாகி விடும்.''

''தொடர்ந்து இதே மாதிரி வம்பு பண்ணிக் கொண்டிருந்தார்கள் என்றால் அதையும் செய்து விட வேண்டியதுதான்... எதற்கும் தேர்தல் முடிகிற வரையில் நீங்களும் விழிப்பாயிருப்பது நல்லது. இருட்டில் தனியே எங்கும் போகாதீர்கள். விடுதி அறைக் கதவை உள்ளே தாழிடாமல் திறந்து போடாதீர்கள். அன்பரசன் ஆட்கள் வெறி பிடித்துப் போய் அலைகிறார்கள்.''

''நன்றி. நீங்கள் கவலைப்படுகிறீர்களே என்பதற்காகவாவது நான் இனிமேல் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். மற்றப்படி என்னை யாரும் எதுவும் செய்துவிட முடியாது.''

'' இதுதான் அசட்டுத் தைரியம் என்பது...''

''தைரியத்தில் அப்படி ஒரு வகையே கிடையாது. அதைரியத்தை வேண்டுமானால் மிகவும் நாகரிகமாக இந்தப் பெயரால் இப்படி அழைத்துக்கொள்ளலாம்.''

'' உங்களை எச்சரிப்பதற்கு எனக்கு உரிமை இல்லையா?''

''தாராளமாக உண்டு! உனக்கு மட்டும்தான் உண்டு.''

''எங்கே? இன்னொரு முறை உங்கள் வாயால் 'உனக்கு' என்று சொல்லுங்கள்.... கேட்க ரொம்பவும் மகிழ்ச்சியாக இருக்கிறது.''

''உன் குரலை டெலிபோனில் கேட்ட பின் உனக்குச் செவிக்கினியாள், மனத்துக்கினியாள் என்றெல்லாம் கூடப் பெயர் வைத்திருக்கலாம் போல் தோன்றுகிறது.''

''என்ன பெயர் வேண்டுமானாலும் சூட்டுங்கள். நீங்கள் சூட்டுகிற பெயர்களெல்லாமே எனக்குப் பிடித்தவைகளாகத்தான் இருக்கும்! ஒரு பொருளாதார மாணவராகிய நீங்கள் என்றால் அநா

வசியமாகக் கவிஞராகி விடுவீர்கள் போலிருக்கிறது.''

''நீயே ஒரு கவிதையாக இருக்கும்போது உனக்காக நான் வேறு கவிஞனாக வேண்டிய அவசியம் இல்லை. சிலபேர் கவிதைக்குப் பொருளாகிறார்கள். வேறு சிலர் கவிதையாகவே இருக்கிறார்கள். நீ இரண்டாவது வகையைச் சேர்ந்தவள்.''

''இது டெலிபோன்! ஒரு முழுப் பாராட்டுச் சொற்பொழிவையே டெலிபோனில் செய்து முடித்துவிட வசதியில்லை. இங்கே வெளியே சிலர் பேசுவதற்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள்.''

''அப்படியானால் மீதியை அப்புறம் நேரில் பேசுவோம். ஒருவேளை யுனிவர்சிட்டி நிர்வாகமே தேர்தலைத் தள்ளிப்போட முயலலாம் என்று தெரிகிறது. அப்படி நடந்தால் நாம் அதை எதிர்த்துப் போராட வேண்டியிருக்கும். மற்ற விவரம் நாளைக்குப் பேசலாம்'' என்று ஃபோனை வைத்தான் பாண்டியன். டெலிபோன் கூண்டிலிருந்து வெளியேறி அறைக்குத் திரும்பும்போது ஓர் இனிய பாடலின் முதல் வரியை அவன் இதழ்கள் சீட்டியடித்தன. கால்களுக்கோ தரையில் நடப்பதாகத் தோன்றவில்லை. நறுமணம் நிறைந்த மல்லிகை மலர்களைக் குவியல் குவியலாகக் குவித்து அந்தப் பூம் படுக்கையின் மேல் நடந்து போவது போல் உணர்ந்தான் அவன். அவளுடைய அன்பு அவனை மிகப் பெரிய கர்வமுடையவனாக்கியிருந்தது. 'அன்பு காரணமாக ஏற்படும் கர்வங்கள்தான் எத்தனை இனிமையாக இருக்கின்றன' என்று எண்ணியபடியே அறைக்குச் சென்றான் பாண்டியன். அறையில் அவன் நுழைந்ததுமே, ''ரெஜிஸ்ட்ரார் ஆபீஸிலிருந்து ஒரு ஸ்பெஷல் மெஸஞ்சர் வந்து உனக்காக இந்தக் கடிதத்தைக் கொடுத்து விட்டுப் போனான்'' என்று பொன்னையா ஒரு கவரை எடுத்து நீட்டினான். பல்கலைக் கழக முத்திரையோடு கூடிய அந்த உறையில் அதிக அவசரத்தைக் குறிக்கும் 'வெரி அர்ஜண்ட்' ரப்பர் ஸ்டாம்பு குத்தப் பட்டிருந்தது. உறையைக் கிழித்துக் கடிதத்தைப் படித்தான் பாண்டியன். பல்கலைக் கழக எல்லையிலும் மாணவர்களிடையேயும் நிலவும் அமைதியற்ற சூழ்நிலையை முன்னிட்டும் நடக்கவிருக்கும் மாணவர் பேரவைத் தேர்தலை முன்னிட்டும் உருவாகியிருக்கும் சூழ்நிலைகளைப் பற்றிப் பேசி முடிவு செய்வதற்காகத் துணைவேந்தர், பதிவாளர், துணைப் பதிவாளர், பேரவைத் தேர்தலுக்குப் பிரதம தேர்தல் அதிகாரியாக நியமிக்கப்பட்டிருந்த பொருளாதாரத் துறைத் தலைவர் பூதலிங்கம் ஆகியோர் அடங்கிய குழு மாணவர் பிரதிநிதிகளையும் தேர்தலுக்கு விண்ணப்பம் கொடுத்திருந்தவர்களையும், முன்மொழிந்திருந்தவர், வழிமொழிந்திருந்தவர்களையும் உடனே சந்தித்துப் பேசுவதற்காக இரவு பத்தரை மணிக்கு ஓர் அவசரக் கூட்டம் கூட்டி அழைத்திருந்தது. கூட்டம் பல்கலைக் கழக எல்லைக்குள்ளேயே இருந்த துணை வேந்தர் மாளிகையில் நடைபெறும் என்று அறிவிக்கப்பட்டிருந்தது. பேராசிரியர்களுக்கும், விரிவுரையாளர்களுக்கும், பதிவாளர் முதலிய அலுவலக ஊழியர்களுக்கும் பல்கலைக் கழக எல்லைக்குள்ளேயே வீடுகள் இருந்ததால் இரவு பத்தரை மணிக்குக்கூட எல்லாரும் வர முடியும் என்று துணைவேந்தர் அதை 'எமர்ஜென்ஸி மீட்டிங்' ஆக ஏற்பாடு செய்திருந்தார். பாண்டியன் அந்தக் கடிதத்தைப் படித்துக் கொண்டிருந்த போதே மோகன்தாஸும், அவர்களோடு கருத்து ஒற்றுமை உள்ள பெரும்பான்மையான மாணவர் பிரதிநிதிகளும் அங்கே வந்து சேர்ந்துவிட்டார்கள். பாண்டியன் அவர்களைக் கேட்டான்:

''என்ன செய்யலாம்? இந்தக் கூட்டத்தைப் பொருட்படுத்திப் போகலாமா? அல்லது நம்முடைய ஆட்சே



**எலெக்டிரானிக் வளையல்!**

அமெரிக்காவில் புது வித கைவிலங்கு ஒன்று கண்டுபிடித்திருக்கிறார்கள். வளையலைப் போன்ற இது எலெக்ட்ரானிக் முறையில் இயங்குகிறது. ஜாமீனில் வெளியே வந்த கைதி குறித்த எல்லையை விட்டு வெளியேறினாலோ அல்லது இந்த வளையத்தைக் கழற்ற முயன்றாலோ சம்பந்தப்பட்ட போலீஸ் ஸ்டேஷனில் அலாரம் ஒலி கேட்கும்!

நியூ டைம்ஸ் - கரிகாலன்

பணையைக் காட்டுவதற்கு அடையாளமாகப் போகாமல் இருந்து விடலாமா?''

''போவது போகாததைப் பற்றி அப்புறம் முடிவு செய்வோம். நம்முடைய பல்கலைக் கழக எல்லையில் இப்போது ஏதோ நெருக்கடி நிலைமை உருவாகி யிருப்பதாக வி. ஸி. இந்த அவசரச் சுற்றறிக்கையில் சொல்லி யிருக்கிறாரே, அது என்ன நெருக்கடி என்பதுதான் எனக்குப் புரியவில்லை. நெருக்கடி நிலைமை இருக்கிறதா அல்லது நெருக்கடி நிலைமையை உண்டாக்கப் பார்க்கிறார்களா என்பது முதலில் நமக்குத் தெரிய வேண்டும்'' என்று மோகன்தாஸ் ஆத்திரத்தோடு கூறியதற்கு மறுமொழியாக,

''நெருக்கடி நமக்கல்ல. வி. ஸி.க்குத் தான் ஏதோ நெருக்கடி நிலைமை ஏற்பட்டிருப்பதாகத் தெரிகிறது'' என்று கூறினான் உடனிருந்த மாணவர்களில் ஒருவன். ஆளும் கட்சிக்கு எதிரான தரப்பைச் சேர்ந்த தேசிய மாணவர்கள் பெருவாரியாக வெற்றி பெற்று விடுவார்கள் என்ற நிலைமை உறுதியானதும் துணைவேந்தரை நிர்ப்பந்தப்படுத்திப் பணிய வைத்துப் பல்கலைக் கழக மாணவர் பேரவைத் தேர்தலையே நடக்க விடாமல் செய்ய அரசாங்கம் முயல்வதாகத் தெரிந்தது. அப்போது துணைவேந்தரா யிருந்த டாக்டர் தாயுமானவனார், அரசாங்கத்தின் தயவுக்குக் கடன் பட்டவர் என்பது பல சந்தர்ப்பங்களில் நிரூபணமாகி யிருந்தது. மாணவர்கள் எல்லாருக்கும் அவரைப் பற்றி நன்றாகத் தெரியும்படி நடந்து கொண்டிருந்தார் அவர். பதிவாளர், துணைப் பதிவாளர், எல்லாரும் துணைவேந்தர் சொல்கிறபடி பயந்து நடக்கிறவர்கள். பிரதம தேர்தல் அதிகாரியாக நியமிக்கப் பட்டிருந்த பொருளாதாரத் துறைத் தலைமைப் பேராசிரியர் பூதலிங்கம் மட்டும் ஓரளவு சுதந்திரமான சிந்தனைப் போக்கு உள்ளவர். துணைவேந்தர் கூட்டியிருக்கும் அவசரக் கூட்டத்துக்குப் போவதா யிருந்தால் பூதலிங்கத்தை மதித்துத்தான் போக வேண்டும். வேறு யாரும் மாணவர்கள் தரப்பில் பேசுகிற அளவு சுதந்திரமான மனப்போக்குள்ளவர்கள் அங்கே இல்லை.

இரவு பத்து மணி வரை அந்த அவசரக் கூட்டத்துக்குப் போவதா வேண்டாமா என்ற தயக்கமான சிந்தனையிலேயே கழிந்து விட்டது. இதற்குள் டிபுடி ரிஜிஸ்டிரார் இரண்டு முறை ஃபோனிலும் கூப்பிட்டு வரச்சொல்லி விட்டார். துணைவேந்தர், பதிவாளர், எல்லாருமே அவசரப்பட்டு எதற்கோ பறப்பது தெரிந்தது. காரசாரமான விவாதங்களுக்குப் பின் மோகன்தாஸும் பாண்டியனும் மற்றும் இருபத்தைந்து பிரதிநிதிகளுமாகத் துணைவேந்தர் கூட்டியிருக்கும் அந்த நள்ளிரவுக் கூட்டத்துக்குப் போவதென்று முடிவாயிற்று.

வெளியே குளிர் அதிகமா யிருந்தும் பொருட்படுத்தாமல் அவர்கள் துணைவேந்தர் மாளிகைக்குப் புறப்பட்டுப் போனார்கள். மாளிகையின் முன் கூடத்தில் துணைவேந்தர், பதிவாளர், துணைப் பதிவாளர், பொருளாதாரப் பேராசிரியர் எல்லாரும் மாணவர்களை எதிர்பார்த்துக் காத்திருந்தனர். பாண்டியனும் நண்பர்களும் அங்கு போவதற்கு முன்பே எதிர்த் தரப்பைச் சேர்ந்த அன்பரசனும், வெற்றிச் செல்வனும், இன்னும் ஒரு நாலைந்து மாணவர்களும் வந்து காத்திருந்தனர். துணைவேந்தர் தாயுமானவனாருக்கு அருகில் ஆளும் கட்சியின் உள்ளூர்க் கோட்டச் செயலாளர் அவரது அந்த உருவத்துக்குச் சிறிதும் பொருத்தமின்றிக் கம்பளிக் கோட்டுடன் அதற்கு மேல் தரைவரை புரளும் மேல் துண்டு சகிதம் அமர்ந்திருப்பதை உள்ளே நுழைந்ததுமே பாண்டியனும், மோகன்தாஸும் கவனித்து விட்டார்கள். துணைவேந்தர் தொடங்கினார்:

''எல்லாரும் வந்தாச்சு இல்லியா? யெஸ்... லெட் அஸ் ஸ்டார்ட்....''— மோகன் தாஸ் அவரை மேலே பேச விடாமல் குறுக்கிட்டான்:

''நீங்கள் தொடங்குவதற்கு முன் ஒரு சிறிய சந்தேகம் சார்...''

''எந்தச் சந்தேகமானாலும் நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி முடித்த பின் கேட்கலாம்.''

''அப்படி இல்லே சார்! இந்தச் சந்தேகம் மிக மிக அவசரமானது. உடனே தீர்க்கப்பட வேண்டியது.''

''அப்படியானால் நீ உன் சந்தேகத்தைக் கேட்கலாம்.''

''இந்த அவசரக் கூட்டம் மாணவர் பிரதிநிதிகளுக்கும் பல்கலைக் கழக நிர்வாகிகளுக்கும் இடையில்தானே ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதாக உங்கள் அறிக்கை கூறியது?''

''ஆமாம்! அதில் சந்தேகமென்ன?''

''சந்தேகமில்லையானால் மாணவர்களிலும் சேராமல் பல்கலைக் கழக நிர்வாகத் தரப்பிலும் சேராமல் அந்நியராக இங்கே யார் இருந்தாலும் அவரை உடனே வெளியேற்றிவிட்டு அப்புறம் நீங்கள் கூட்டத்தைத் தொடங்கலாம். அதுவரை இந்தக் கூட்டத்தை நாங்கள் தொடங்க விடமாட்டோம்.''

(தொடரும்)

# இளைஞர் சமுதாயம்

## 15. தலைமை அனுபவம் வாய்ப்பு

என் நண்பர் ஒருவர் தம் பெண்ணுக்கு ஐந்து ஆண்டுகளாக வரன் தேடினார். பம்பாய், கல்கத்தா, டில்லி, நாகபுரி முதலிய ஊர்களிலிருந்தெல்லாம் வரன்களின் ஜாதகங்கள் வந்தன. ஆனால் எதுவும் பெண்ணின் ஜாதகத்துடன் பொருந்தவில்லை. கடைசியில் அவர் பெண்ணுக்குத் திருமணம் நிச்சயமாகி விட்டது. வரன் எந்த ஊர்க்காரன் தெரியுமா? சென்னையில் இருப்பவன். அதுவும் அவர் பக்கத்து வீட்டிலேயே குடியிருப்பவன். இவ்வளவு சமீபத்தில் வரனை வைத்துக்கொண்டு ஊரெல்லாம் தேடியலைந்திருக்கிறார்! இதே மாதிரி அதிசய அநுபவம் எனக்கும் பொள்ளாச்சியில் ஏற்பட்டது.

Leo Club of Pollachi என்ற இளைஞர் சங்கத்தின் விலாசத்தைக் காட்டி, "நியூ ஸ்ட்ரீட் எங்கே இருக்கிறது?" என்று பலரிடம் கேட்டேன். எல்லோருடைய முகங்களிலும் கேள்விக் குறிகள்தான் தோன்றியது! ஆட்டோ ரிக்ஷா ஒன்றை அமர்த்திக்கொண்டு பொள்ளாச்சியைச் சுற்றி ஒரு நகர் வலம் வந்தேன். விசாலமான வீதிகளையும், மாளிகை போன்ற வீடுகளையும் பார்த்து வியந்தேன். சுமார் ஒரு மணி நேரம் சுற்றியும் நியூ ஸ்ட்ரீட் கிடைக்கிற வழியாயில்லை. கடைசியில் மர்மம் விடுபட்டது! அந்தப் "புதுத் தெரு"வுக்குப் பழைய பெயர் ஒன்று இருப்பதாகத் தெரிய வந்தது!

இளைஞர் சமுதாயத்தைச் சந்திக்கக் கோவையிலிருந்து பொள்ளாச்சிக்கு அதிகாலையில் பஸ் பிரயாணத்தை மேற்கொண்டது ஆனந்தமாயிருந்தது. (சென்னை பல்லவா போக்குவரத்துக் கழகத்தின் பஸ்களில் பிரயாணம் செய்பவர்கள் 'பஸ் பிரயாணத்தில் ஆனந்தம் வேறு கேடா?' என்று முணுமுணுப்பது என் காதில் விழாமலில்லை. கோவை பஸ்களுக்கு மட்டுமே இந்த ஆனந்தம் பொருந்தும் என்பதை அறிக.)

ஒருவாறு நியூ ஸ்ட்ரீட்டைக் கண்டுபிடித்து லியோ கிளப்பை அடைந்தேன். சங்கக் காரியதரிசி லியோ பரமசிவம் என்ற இளைஞர் மிகவும் அன்புடன் வரவேற்றார். இன்னும் சில அங்கத்தினர்களும் அவருடன் இருந்தனர். "இன்று காலை எட்டு மணிக்கெல்லாம் வந்து விடுவதாக எழுதியிருந்தீர்கள், 'மணி பதினொன்றாகிறதே! இன்னும் வரக் காணோமே' என்று நாங்கள் பேசிக் கொண்டிருந்தோம்.." என்றார் பரமசிவம். (நான் அவர்களுக்கு எழுதிய கார்டு என்னைப் போல் சுற்றி அலையாமல் ஒழுங்காகப் போய்ச் சேர்ந்திருக்கிறது! 'ஒரு போஸ்ட் கார்டின் சமர்த்துக்கூட நமக்கு இல்லையே!' என்று மனசுக்குள் ஏங்கினேன்!)

பொள்ளாச்சி அரிமா சங்கத்தின் ஆதரவுடன் லியோ கிளப் 1969ம் ஆண்டு தொடங்கப்பட்டது. பதினேழு வயதிலிருந்து இருபத்து நான்கு வயது வரையிலுள்ள இளைஞர்களுக்கென்றே ஆரம்பிக்கப்பட்ட சங்கமாதலால் இது பெரியவர்கள் கலப்பில்லாத அசல் இளைஞர் சங்கம் என்று குறிப்பிடலாம். இம்முறையில் இது தமிழ் நாட்டிலேயே இரண்டாவதாகும். சமூகப் பணி புரிவதையே நோக்கமாகக் கொண்ட இச்சங்கத்துக்கு அனைத்து நாட்டு இளைஞர் சங்கங்களுடனும் தொடர்பு உண்டு.

சங்கத்தின் செயலாளர் லியோ பரமசிவம் பண்பாடுள்ள இளைஞர். அவர் பேசக் கேட்பதே மிகவும் சுவாரசியமாக இருந்தது.

"லியோ கிளப் என்பதைக் கொஞ்சம் விளக்க முடியுமா?" என்று கேட்டேன்.

"ஆகா! நானே சொல்வதாகத்தான் இருந்தேன். Leadership, Experience, Opportunity என்ற மூன்று வார்த்தைகளின் முதல் எழுத்



புத்தக வங்கியின் ஆரம்ப விழா. ரோட்டரி கிளப் ஜில்லா கவர்னர் தலைமை தாங்குகிறார்.



லியோ கிளப் தலைவர் நாகராஜன் ரோட்டரி கவர்னரிடம் ஏழைகளுக்காக மருந்துப் பார்சலை வழங்குகிறார்.

ருக்கள்தான் 'லியோ' என்று உருவாகியிருக்கின்றனர்.''

''உங்கள் சங்க அங்கத்தினர்களில் யாராவது வேலை பார்ப்பவர்கள் இருக்கிறார்களா?''

''இல்லை. எல்லோரும் மாணவர்கள்தான். அதுவும் பொள்ளாச்சி நல்லமுத்துக் கவுண்டர் மகாலிங்கம் கல்லூரியைச் சேர்ந்த மாணவர்கள்தான்.''

''உங்கள் சங்கக் கூட்டங்களை எங்கே நடத்துகிறீர்கள்? எப்போது நடத்துகிறீர்கள்?''

''எங்கள் கல்லூரியில் மாதம் இரு முறை கூடி எங்கள் திட்டங்களைச் செயலாற்றவேண்டிய முறைகள் பற்றி விவாதிக்கிறோம். தற்சமயம் எங்கள் சங்கத்தில் இருபத்தொரு அங்கத்தினர்கள் இருக்கின்றனர். கட்டுரைப் போட்டி, பேச்சுப் போட்டி ஆகியவைகளை ஆண்டுதோறும் நடத்தி வருகிறோம். எங்கள் சங்கத்தின் முக்கியமான பணி ஒன்றைக் குறிப்பிட வேண்டும். கல்லூரியில் பயிலும் ஏழை மாணவர்களுக்கு உதவ வேண்டும் என்ற ஆவலோடு அவர்களுக்குப் புத்தகங்கள் வாங்கும் பெருஞ் சுமையைத் தவிர்க்க நாங்கள் ஒரு புத்தக வங்கி (Book Bank) நடத்துகிறோம். பொள்ளாச்சி ரோட்டரி சங்கம் (Rotary Club) நடத்தும் மருந்து வங்கிக்கு (Drug Bank) எங்கள் சங்கத்திலிருந்து ரூ. 250 மதிப்புள்ள மருந்துகளை அன்பளிப்பாக வழங்கினோம்.....''

''இன்னும் ஏதாவது குறிப்பிட வேண்டிய பணி இருக்கிறதா?''

''இவ்வாண்டு வங்கதேச விடுதலைப் போரின்போது சங்கத்தின் சார்பாகப் பாதுகாப்பு நிதி திரட்டித் தந்தோம். எப்படி நிதி திரட்டினோம் தெரியுமா? ஒரு திரைப் படம் போட்டு வரியைக் கட்டிய பின்பும் ரூ. 501 கிடைத்தது. பொள்ளாச்சியில் பஸ் நிற்கும் இடங்களில் பிரயாணிகளுக்கு கொட்டகைகள் அமைக்கவும் ஏற்பாடு செய்திருக்கிறோம்.''

இளைஞர் பரமசிவம் உற்சாகமாகக் கூறிய விஷயங்களைக் கேட்க ஆனந்தமாக இருந்தது.

''உங்கள் சங்கத்தைத் திறமையாக நடத்த யாராவது பெரியவர்கள் யோசனை சொல்வது உண்டா?'' என்று ஒரு கேள்வியைக் கேட்டு வைத்தேன்.

''உண்டு ஸார். எங்கள் கல்லூரிப் பிரின்ஸிபல் திரு ஆன்கொண்டார் அவர்கள் அவ்வப்போது தமது மேலான யோசனைகளை வழங்கி வருகிறார். எங்கள் சங்கத்தின் பணிகள் சிறப்பாக நடக்க வேண்டும் என்பதில் அவருக்கு மிகவும் சிரத்தை. அவருடைய யோசனைகளைக் கேட்டு நாங்கள் சில பல நல்ல திட்டங்களைச் செயலாக்க முற்பட்டு வருகிறோம். எங்கள் கல்லூரி மாணவர்கள் அனைவருக்கும் பொதுவான உதவி ஒன்றைச் செய்தோம். அதாவது மாணவர்களுக்கு ஏராளமான கடிதங்கள் வரும். அவற்றைச் சேகரித்து வைப்பது பெரும்பாடாக இருந்தது. அதைத் தவிர்க்கும்பொருட்டு, ஆங்கில அகர வரிசையில் அமையுமாறு ஒரு கடிதப் பெட்டகம் (Letter Container) வாங்கி வழங்கினோம். அதன் விலை ரூ. 400. பொள்ளாச்சியைச் சுற்றியுள்ள உயர்நிலை ஆரம்பப் பள்ளிகளில் பயிலும் ஏழைக் குழந்தைகளுக்குச் சீருடையும் புத்தகங்களும் வழங்க வேண்டும் என்று ஒரு தீர்மானம் கொண்டு வந்து இவ்வாண்டு முதல் அதைச் செயல்படுத்தத் தொடங்கியுள்ளோம்.''

''இன்னும் குறிப்பாக ஏதாவது....'' என்றேன்.

''...நல்ல வேளையாக, உங்களுக்குக் குறிப்பாகச் சொல்ல ஒன்று இருக்கிறது. ''Polleo'' என்ற பெயரில் மாதம் ஒரு முறை வெளியாகும் ஆங்கிலப் பத்திரிகை ஒன்று நடத்துகிறோம். எங்கள் சங்க நடவடிக்கைகள் பற்றி அதில் எழுதுகிறோம்....'' என்று கூறிச் சற்று நிறுத்திய லியோ பரமசிவம் சிற்றுண்டித் தட்டை என் முன் வைத்து, ''உங்களையே உங்களுக்குப் படைத்திருக்கிறோம்'' என்று குறும்பாகச் சிரித்துக் கொண்டே கூறினார்.

நான் குனிந்து தட்டைப் பார்த்தேன். ஸ்வீட் லோமாஸ் ஒன்றும் கார லோமாஸ் ஒன்றும் வைத்திருந்தார்கள் பொல்லாத லியோ இளம் அங்கத்தினர்கள். —லோமாஸ்

# படித்துப்பாருங்கள்

## அறவழி வாசகம் (இரண்டாம் புத்தகம்)

**பு**திய பாணி பாட நூல் இது.

தமிழ் வளர்த்த அகத்தியரில் தொடங்கி, தமிழ் மறை தந்த திருவள்ளுவர் வரை, பண்டைய பாரதத்தின் பெருமைகளைக் கூறும் வரை முதற் பாகமும், அறிவுரைகளும் அறவுரைகளும் வழங்குவதாக இரண்டாம் பாகமும் தயாரிக்கப்பட்டுள்ளன. இந்தப் புத்தகம் எல்லாவற்றையும் சுருக்கச் சொல்லி, விரித்துரைக்கும் பொறுப்பை ஆசிரியர்களுக்கே விட்டுள்ளது. இரண்டாம் வகுப்பாயினும் முதல் வகுப்பாயினும் இளம் சிறார்களுக்கு ஏற்பப் பாடங்களைத் தயாரித்துக் கொண்டே வகுப்புகளுக்கு ஆசிரியர்கள் செல்ல வேண்டும் என்பதையும் எடுத்துக்கூறுகிறது. இந்த நிறைவிலும் ஒரு குறை. குழந்தைகள் கருத்தை ஈர்க்கக்கூடிய கதைகள் சில அமைந்திருந்தால் எடுப்பா யிருந்திருக்கும்.

வெளியிடுவோர்: புராதன கலாசாரக் கல்வி நிலையம், 20, ஏ. கால்வாய்க் குறுக்குத் தெரு, காந்திநகர், சென்னை - 20; ரூ. 1 75.

## என் நாடக வாழ்க்கை

**ம**ணிவிழாக் கண்ட நாடகக் கலைஞரான திரு டி. க. சண்முகம் தமிழ் நாடக மேடையின் முப்பதாண்டு கால வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்டு பழைய நாடக நடிகர்களை நல்ல முறையில் அறிமுகப்படுத்தி, அவர்களுடைய பெயர்கள் மறைந்து போகாதபடி செய்திருக்கிறார். இந்நூல் வெறும் வரலாற்றுக் குறிப்பு மாதிரி இருந்து விடாமல், ஒரு நாவலைப் போல் படிப்பதற்கு சுவாரசியமாகப் புனையப்பட்டிருக்கிறது. சிறந்த நடிகரான திரு சண்முகம் ஒரு நல்ல எழுத்தாளருங்கூட என்பதற்கு இந்நூல் சான்று. இது முதல் பாகம். அடுத்த இருபது ஆண்டு வாழ்க்கையை இரண்டாம் பாகமாக எழுதவிருக்கிறார்.

பிரசுரம்: வானதி பதிப்பகம், தியாகராய நகர், சென்னை — 17, விலை: ரூ. 12 00.

# ராக்ஃபோர்ட் பொருளாதார அமைப்பை வலுப்படுத்துகிறது

நமது கிராமங்களில் பொருளாதாரப் புரட்சி நிகழ்ந்துவருகிறது. நீர்ப்பாசன அமைப்புக்களின் பயனாக மேலும் செழுமையான பயிர்கள் காட்டுப்புறங்கள் முழுவதிலும் புதுச் செல்வத்தைப் பரப்பிவருகின்றன. மண் குடிசைகள் இருந்த இடங்களில் செங்கல் கட்டடங்கள் தோன்றிவருகின்றன. நமது விவசாயச் செல்வத்தைப் பத்திரமாகப் போற்றிக்காக்க அங்கங்கே கிடங்குகள் தோன்றிவருகின்றன.

இந்த முன்னேற்றப் பாதையின் ஒவ்வொரு அடியிலும், பொருளாதாரத்திற்குத் திண்மையையும், வலுவையும் தந்து, புரட்சிக்குப் புத்தூக்கம் அளிக்கிறது ராக்ஃபோர்ட்.







## ராக்ஃபோர்ட்

டால்மியா சிமெண்ட்







**டால்மியா சிமெண்ட் (பாரத்) லிட்.,**
பதிவுபெற்ற அலுவலகம் மற்றும் ஆலைகள்:
டால்மியாபுரம், தமிழ் நாடு.
தலைமை அலுவலகம்: சிந்தியா ஹவுஸ், புது டெல்லி-1.
ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்:
சிமெண்ட் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ் லிட்.,
டால்மியாபுரம், தமிழ் நாடு.



ஸ்ரீ ஸ்வர்ணாம்பிகை

# முன்னைப் புகழ் கொண்ட சென்னைத் திருக்கோயில்

சென்னை மாநகரத்தில் புதுக் காலனிகள் தோன்றியவண்ணம் இருக்கின்றன. இவற்றில் உடனே புதுப் புது ஆலயங்களும் தோன்றி, நமது மக்களின் உடலோடு ஊறிவிட்ட ஆஸ்திகத்துக்குச் சான்று பகர்ந்து வருகின்றன. பேட்டைக்குப் பேட்டை புதுக் கோயில் தோன்றுவது விசேஷம்தான். ஆயினும் புதிய கோயில்களைவிட, பூர்வத்தில் ரிஷிகளவரர்களால் ஆராதிக்கப்பட்ட மூர்த்தங்களை வைத்து எடுக்கப்பட்ட ஆலயங்களில் சாந்நித்தியம் அதிகம் என்பது ஆன்றோர் கருத்தாகும். சென்னை கோடம்பாக்கத்தில் இப்பேர்ப்பட்ட ஒரு பழம்பெரும் கோயில் பழம் பெருமையை இழந்துவிட்ட நிலையில் இருப்பதாகத் தெரிகிறது.

கோடம்பாக்கம் பவர்ஹவுசுக்குச் சிறிது வடக்கேயுள்ள ஸ்ரீ பரத்வாஜேசுவரர் ஆலயமே அந்தத் தொல்புகழ் தேவாலயம். காஞ்சியம்பதியைத் தலைநகராகக் கொண்டு பல்லவர் அரசோச்சியபோது, தொண்டை மண்டலத்தின் இருபத்திநாலு கோட்டங்களில் ஒன்றினுக்குத் தலைநகராயிருந்தது புலியூர் எனப்படும் கோடம்பாக்கப் பகுதி. இந்த உண்மையை, பல்லவர்கள் பாரத்வாஜ கோத்திரத்தினர் என்று காஞ்சி அருளாளப் பெருமான் கோயில் கல்வெட்டு தெரிவிப்பதோடு இணைத்து, புலியூராகிய கோடம்பாக்கத்திலே பழமை வாய்ந்த பாரத்வாஜேசுவர ஆலயம் இருப்பதைக் கவனிக்குமிடத்து, இக்கோயில் பல்லவ மன்னரின் திருப்பணியோ என்று ஊகிக்க இடமுண்டு. சரித்திரத்துக்கு முற்பட்ட காலத்தில் பரத்வாஜ முனிவர் வழிபட்ட மூர்த்தியே பாரத்வாஜேசுவரர் என்பது ஸ்தல புராணம். வாலியும் இங்கு வழிபட்டதாக ஐதிஹ்யம்.

பல நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட கோயில் என்பதில் சந்தேகத்துக்கு இடமில்லை. கோயிலின் அமைப்பும், அது இன்றுள்ள நிலைமையுமே பழமைக்குச் சான்று பகர்கின்றன.

கோயில் புகழ் குன்றியிருந்தாலும், மூர்த்திகளின் அருட்பொலிவு குன்றவில்லை. பாரத்வாஜேசுவரரும், ஸ்வர்ணாம்பிகையும், நிற்கின்ற விநாயகரும், தக்ஷிணாமூர்த்தியும், துர்க்கையும், நவக்கிரகங்களும், மற்ற மூர்த்திகளும் சாந்நித்தியத்தோடு திகழ்கின்றன.

இவ்வாலயத்தை ஜீர்ணோத்தாரணம் செய்ய அன்பர்கள் திருப்பணிக் குழு அமைத்து முயற்சி தொடங்கியுள்ளனர். ஜகத்குரு ஸ்ரீ காஞ்சிப் பெரியவாள் இப்பணியில் விசேஷ அக்கறை காட்டி, அநுக்கிரகம் புரிந்திருக்கிறார்கள். ஸ்ரீலஸ்ரீ தருமை ஆதீன கர்த்தர் அவர்களும் இப்பணிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்துள்ளார்கள்.

ஆலயத்தைப் புதுக்குவதோடு, புதிதாக நடராஜப் பெருமானுக்கும் சைவ சமயகுரவரான நால்வருக்கும் மூர்த்திகள் பிரதிஷ்டை செய்யவிருக்கிறார்கள். ஸ்ரீ ஆதி சங்கராசாரியர்கள் ஸ்ரீ காமாக்ஷி தேவிக்கு வழிபாடு புரிவது போன்ற நூதனமான சந்நிதியும் எழுப்ப உத்தேசம். தற்போதுள்ள வள்ளிதேவசேனா சமேத முருகனுக்குத் தனிச் சுற்றுக் கோயில் எடுப்பிக்கவும் திட்டமிட்டிருக்கிறார்கள்.

இந்தப் பெரிய காரியங்களைச் செய்து முடிக்க ரூபாய் ஐம்பதாயிரத்துக்கும் அதிகமாகச் செலவாகும். இப்பணியை முடிப்பதோடு, ராமேசுவரத்தில் காஞ்சிப் பெரியவாள் அமைத்துள்ள சங்கராலயத்தில் நமது சமயத்தின் சகல பிரிவுகளையும்



பாரத்வாஜேசுவரர் கோயில்

சேர்ந்த மகா புருஷர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் செதுக்கப்பட்டிருப்பது போல், பரத்வாஜேசுவரர் ஆலயத்திலும் செய்வதற்கு ஆசாரியப் பெருமான் ஆசி தந்திருக்கிறார்கள். தமிழகத்தின் தலைநகரில் இதனை ஒரு ''முன் மாதிரி''க் கோயிலாக்க வேண்டுமென்பது திருப்பணிக் குழுவினரின் ஆசையாகும்.

ஆஸ்திக வளர்ச்சிக்கு அரும்பணி புரிந்து வரும் தியாகராயநகர் இந்து தர்ம மன்றத்தினர் இத் திருப்பணியில் சிறப்பான ஈடுபாடு காட்டி இதுவரை நூயாயிரம் ரூபாய் நன்கொடை வழங்கியுள்ளனர். சிவாலயச் சிறப்புக்களைச் செம்மையாகக் கூறும் அற்புதக் கட்டுரைகள் பலவும், சிவாலய முக்கிய மூர்த்திகளைச் சித்திரிக்கும் 'சில்பி'யின் அருமையான பல மூவர்ணப் படங்களும் கொண்ட ஆண்டு மலரினை இந்து தர்ம மன்றத்தினர் வெளியிட்டுள்ளனர். இதன் விலை ரூ. 5-00. மலர் விற்பனைத் தொகை முழுதும் பரத்வாஜேசுவரர் ஆலயத் திருப்பணிக்கே அளிக்கப்படுவது குறிப்பிடத்தக்கது. மலர் கிடைக்குமிடம்: இந்து தர்ம மன்றம், 1/23 ராமசாமித் தெரு, தி. நகர், சென்னை - 17.

ஸ்ரீ பாரத்வாஜேசுவராலய திவ்விய கைங்கரியத்தில் அன்பர் அனைவரும் பங்கு பெற வேண்டும். சென்னையில் ஒரு பழைய கோயிலை அதன் பழம் பெருமைக்கு உரித்தான புதுப் பெருமையில் நிலைநிறுத்த வேண்டும். பொருள் அனுப்ப வேண்டிய முகவரி: நிருவாக அலுவலர், ஸ்ரீ பாரத்வாஜேசுவரர் திருக்கோயில், புலியூர், கோடம்பாக்கம், சென்னை - 24.

---




''போராட்டங்கள்'' நாவலை நான் எழுதிக் கொண்டிருந்தபோது, கதையில் ஒரு பத்திரிகைக் காரியாலயமும், ஒரு நிருபரும் தாக்கப்படுவதாக நான் வர்ணித்ததை ஓர் எழுத்தாள நண்பர் விமரிசனம் செய்தார். ''தமிழ் நாட்டில் இவ்வளவு கேவலமாக யாரும் நடந்ததில்லை, இது உண்மைக்குப் புறம்பானது'' என்று மறுத்தார். ''அரசாங்கம், பத்திரிகைமீது கெடுபிடி செய்திருக்கிறதே தவிர, அரசியல் கட்சியைச் சேர்ந்தவர்கள் இவ்வளவு ஈனத்தனமாக இதுவரை நடந்து கொண்டதில்லை; இது உண்மைக்குப் புறம்பானது'' என்றார். ஆனால், நான் கற்பனை செய்த விஷயங்களை மாற்றி எழுத அப்போது பிரியப்படவில்லை. இப்போது, அலையோசையும் குமுதமும் உண்மையிலேயே தாக்குதலுக்கு உள்ளாகி யிருக்கின்றன! கதையில் கற்பனை செய்யப்பட்ட சம்பவம் உண்மையிலேயே தமிழ் நாட்டில் நடந்து விட்டது என்பதை நினைக்கும்போது மனம் வேதனைப்படுகிறது.

பாளையங்கோட்டை,
4-7-72 ர. சு. நல்லபெருமாள்

சென்ற வாரம் (9௨.) கிரன் எழுதிய கட்டுரையில் பல ஆயிரக்கணக்கான ரூபாய்களில் செய்யப்பட்ட ஒரு வெள்ளிச் சைக்கிள் மதுரை மேயருக்குப் பரிசளிக்கப்பட்டது என்று நினைக்கும்படி செய்தி வெளி வந்துள்ளது. அதுவல்ல உண்மை. சைக்கிள் போன்ற ஓர் உருவம். அதன் நிறை 100 கிராமுக்கும் குறைவானது (சரியாக அளந்து பார்த்ததில்). 6 அங்குல நீளம் 4 அங்குல அகலமுள்ள

★ கதையல்ல உண்மை!

★ பரிசளிப்பு

★ வேதனை தந்த விஷயம்

சைக்கிள் போன்ற உருவம். அது 9 அங்குல நீளமும் 6 அங்குல அகலமும் உள்ள கண்ணாடிப் பெட்டியினுள் வைக்கப்பட்டுள்ளது. அது ஒரு காட்சிப் பொருள். அன்பளிப்பல்ல. லஞ்சமல்ல. நினைவுச் சின்னம். மதுரை மாநகரத் தந்தையின் செயலுக்குக் கொடுத்த நன்றிச் சின்னம்.

மதுரை-10
10-7-72 கணேசன்

சீல்லியில் அண்மையில் வெளியான ஒரு நகைச்சுவைத் துணுக்கைப் பார்த்து மிகவும் வருந்தினேன். காலஞ்சென்ற திரு ஸி.ஆர். ஸ்ரீனிவாஸனின் மருமான் என்ற முறையிலும் சுதேசமித்திரனில் மூன்று வருஷங்களுக்கும் மேலாகப் பணியாற்றியவன் என்ற முறையிலும் இதை எழுதுகிறேன். 93 ஆண்டுகளாகப் புகழோடு விளங்கிய சுதேசமித்திரனை மூட நேர்ந்ததில் நிர்வாகிகள் மிகவும் துயரமடைந்துள்ளனர். 130க்கும் மேற்பட்ட குடும்பங்கள் சிரமப்படுகின்றன. இந்நிலையில் சுதேசமித்திரன் மூடப்பட்டது குறித்து இப்படி ஒரு நகைச்சுவைத் துணுக்கு வெளியானது பலருக்கு வேதனை அளிக்கும்.

வாலாஜாபுரம்,
7-7-72 எஸ். ஆர். ராமன்

தேசபக்தியை வளர்த்த பழம் பெரும் பத்திரிகையான சுதேசமித்திரன் மூடப்பட்டது குறித்து வருத்தம் தெரிவித்துத் தலைவர் ராஜாஜி அவர்களே எழுதியுள்ளதை இங்கு நினைவுகூர்கிறோம்.

மகாகவி பாரதியார் பணியாற்றிப் புகழ் சேர்த்ததும் மதிப்புக்குரிய திரு ஸி. ஆர். ஸ்ரீனிவாஸன் ஆசிரியராய் இருந்து நடத்தியதுமான கண்ணியமிக்க பத்திரிகை சுதேசமித்திரன் மூடப்பட்டதைக் குறித்துக் கிண்டல் செய்யும் நோக்கம் எங்களுக்குக் கிஞ்சித்தும் இல்லை. பெட்டிக்கடைகளில் ஒசியில் பத்திரிகை படிப்பவர்களைக் கேலி செய்யும் நகைச்சுவைத் துணுக்கு தான் அது. எனினும் மேற்படி நகைச்சுவைத் துணுக்கினால் யாருடைய உள்ளமாவது புண்பட்டிருக்குமானால் அதற்காக வருந்துகிறோம். -ஆசிரியர்

# ஸைக்கோ ஸாரநாதன்



கி. ராஜேந்திரன்

## 24. பேர்ஷோவா

“அப்பா! காலமே பேர்ஜம் போறச்சேயே சொல்லணும்னு நினைச்சேன்; அம்மாவுக்கு இன்னிக்குப் பிறந்த நாள்!'' என்றாள் மீனு.

'' அதுக்கு என்ன பண்ணச் சொல்லறே? வண்ணப் போஸ்டர் அச்சடிச்சு ஒட்டும் அளவுக்கு என்னிடம் பணம் இல்லே'' என்றார் பத்மநாபன்.

''அவர்கிட்டே போய் எதுக்குடி இதையெல்லாம் சொல்லறே? நான் என்ன பச்சைக் குழந்தையா கேக் வெட்டி பர்த் டே கொண்டாட?''

''என்னவோ சந்தோஷப்படுவேளாக்கும்னு நினைச்சுச் சொன்னேன். ரெண்டு பேரும் மூஞ்சியைத் தூக்கிக்கறேள்'' என்றாள் மீனு. ''எப்படியோ அப்பா, என் பாக்கெட் மணியிலே யிருந்து ஒரு பிரசெண்ட் வாங்கப் போறேன். அதுக்காவது வழிபண்ணு.''

''ஆகட்டும், பார்க்கலாம்'' என்றார் பத்மநாபன் காமராஜ் பாணியில்.

அப்போது ஹனி மூனுக்கென்று கொடைக்கானல் வந்து ஹாப்பி ஹாலிடேயில் தங்கியிருந்த ஒரு தம்பதி பத்மநாபனின் உதவியை நாடினர். ''பிளீஸ்! ஒரு 'கிளிக்' பண்றீங்களா?'' என்று கேட்டுத் தன் காமிராவை அவரிடம் தந்தான் கணவன். அவர்கள் தாங்கள் தங்கியிருந்த அறைக்கு முன்னால் நின்று படம் பிடித்துக் கொண்டனர். ''அறையின் மேலே உள்ள தொண்ணூற்றெரன்பது என்கிற எண் படத்தில் விழணும் ஸார், அதைக் கவனிச்சிக்கிடுங்க'' என்று கேட்டுக் கொண்டான் அவன்.

பத்மநாபன் அவர்கள் கோரிக்கையைப் பூர்த்தி செய்து வைத்தார். அப்போது அவருக்கு அனுசூயா கொண்டு வந்திருந்த காமிராவின் ஞாபகம் வந்தது. ''ஏன் அனு! பாக்ஸ் காமிரா என்பதால் பெட்டிக்குள்ளேயே சதா பூட்டி வைக்கணுமா? நாலு படம் எடுக்கக் கூடாது? கொடைக்கானல் வந்ததற்கு ஞாபகார்த்தமாக இருக்குமில்லையா?''

''அதை வெளியே எடுத்தால் உடனே 'நான்தான் படமெடுப்பேன்'னு விசு போட்டிக்கு வரான். உடைச்சுடுவான்.''

''அதெல்லாம் ஒண்ணும் உடைக்க மாட்டான்; நீ கொண்டு வா சொல்றேன்!'' என்றார் பத்மநாபன்.

''ரங்கன்தான் படம் எடுத்திருக்கானே; கேட்டால் உள்ளங்கை அகலத்துக்கு நாலு படம் தர மாட்டானா?'' என்று சொல்லிக் கொண்டே இடுப்பிலிருந்து சாவிக் கொத்தை எடுத்து அம்



புறம் மீனாவிடம் தந்தாள். ''என்னமோ தன் காமிராவிலே டெலிஸ்கோப்பைப் பொருத்திக் காட்டறேன்னு வேறு அன்னிக்குக் கோக்கர்ஸ்வாக்கில் சொன்னான். அப்புறம் அதைப் பற்றி மூச்சுக்கூட விடலை.''

அறைச் சாவியையும் பெட்டிச் சாவியையும் வாங்கிக் கொண்டு போய் அனுவும் மீனாவும் காமிராவுடன் திரும்பி வந்தபோது பத்மநாபன் அமிர்தலிங்கத்துடன் அளவளாவிக் கொண்டிருக்கக் கண்டனர்.

''அந்தக் குடுகுடுப்பாண்டியோடு அப்பா பேசிண்டிருக்கிற மாதிரி ஒரு ஸ்நாப் எடுத்துக்கோடி'' என்றாள் மீனா.

''ஹிப்பி மாமா! இந்தப் பக்கம் பாருங்கோ! ஸ்மைல் ப்ளீஸ்!'' என்றாள் அனு.

அமிர்தலிங்கம் திரும்பினான். காமிரா அவன் கண்களில் தட்டுப்பட்டது. திடும்மென்று அவனை இருள் கவ்விச் சூழ்ந்தது. அந்த இருட்டில், வெள்ளித் திரையில் தோன்றும் சினிமா போல, சிறைச்சாலைக்குள் தள்ளு முன்னர் போலீஸார் ஸாரநாதனை நேர்முகமாகவும் பக்கவாட்டிலும் படமெடுத்த காட்சியைப் பார்த்தான்.

இருள் விலகிய மறு கணம் அவன் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து அனுசூயாவின் கரத்திலிருந்த காமிராவைப் பிடுங்கிப் பக்கத்தில் பாறைகளைக் கொண்டு கட்டப்பட்டிருந்த சுவரில் ஓங்கி அறைந்தான். காமிரா உருத்தெரியாமல் நசுங்கியும் உடைந்தும் போயிற்று!

அனுசூயா அழக்கூடத் தெம்பில்லாமல் திகிலடைந்து பிரமித்து நின்றாள்! அமிர்தலிங்கத்தின் உடல் பாதாதிகேசம் நடுங்கிக் கொண்டிருந்தது!

பேசுகிற சக்தி பெற்றதும் பத்மநாபன், ''சீ! நீயும் ஒரு மனுஷனா? என் கோபத்தை முழுசாகக் காட்டறதுக்கு முன்னாடி போயிடு இங்கிருந்து'' என்று அமிர்தலிங்கத்தை விரட்டினார்.

அடுத்த கணம் மீனா அனுசூயா அருகே மண்டியிட்டு அவளைக் கட்டி அணைத்துக் கொண்டாள். அவ்வளவுதான்; ஆதரவு கிடைத்ததும் அனுசூயாவின் அழுகை ஒலி ஸைரன் ஊதுவது போல் பெரிதாகக் கிளம்பியது. அவளைச் சமாதானப்படுத்த எல்லாருமாகச் சேர்ந்து பெரும் பாடு பட்டதில், அமிர்தலிங்கம் நடுக்கம் தீராமலே அங்கிருந்து சிரமப்பட்டு நடந்து போனதை யாரும் கவனிக்கவில்லை.

* * *

கொடைக்கானல் நகரம் முடிந்து, செங்குத்தாக மலை உயர்ந்து கானகமும் ஆரம்பிக்கும் ஓர் இடத்தில் அமைந்திருந்தது பேர்ஷோலா அருவி. ஒரு சோலையாக விளங்கிய அந்த இடத்தில் கிடைத்த சந்து பொந்துகளிலெல்லாம் சூரிய ஒளி ஊடுருவித் தரையில் ஜாலம் செய்தது.

''என்னவோ மாடர்ன் ஆர்ட் என்கிறார்களே; அதில் மொபைல் ஆர்ட் என்றுகூட ஒரு வகை உண்டு. காற்றின் துணை கொண்டோ அல்லது விசையைப் பொருத்தியோ ஓவியம் அல்லது சிற்பத்தைச் சுழல வைப்பார்கள்; அல்லது ஏறி இறங்கச் செய்வார்கள். அந்த நூதன பாணியெல்லாம் இயற்கை விரிக்கும் இந்த மொபைல் ஆர்ட்டுக்கு ஈடாகுமா?'' என்று கேட்டார் பத்மநாபன், தரையில் தோற்றமளித்த ஒளிச் சித்திரத்தைச் சுட்டிக் காட்டி.

''நடமாடும் நூலகம், நடமாடும் மருத்துவ மனை மாதிரி இது ஒரு நடமாடும் கோலம்'' என்றாள் மீனா. காற்றில் இலைகள் அசைந்தபோது சித்திரக் கோலம் சிரித்தபடியே புதுப் புது தினுசாக உருமாறிக் கொண்டிருந்தது.

அவர்கள் மேலே சென்றார்கள். அருவியை நெருங்க சிமெண்டு தளம் போடப்பட்ட குறுகலான பாதை இருந்தது. ஒருவர் தாராளமாக நடக்க



லாம். இருவர் தோளோடு தோள் இடிக்கச் சற்றுச் சிரமப்பட்டு நடக்கலாம். காவல் இல்லாத காதலருக்கு அது சிரமமாகத் தோன்றாது. ஆனால் மீனாவுக்கும் ரங்கனுக்கும் பாதுகாப்பு பலமாக அல்லவா இருந்தது! அவர்கள் ஒருவர் பின் ஒருவராகவே சென்றார்கள்.

அருவி சற்றுத் தொலைவில் விழுந்து அங்கே ஓடையாக வந்து கொண்டிருந்தது. அதன்மீது ஒரு குட்டிப்பாலமும் அமைந்திருந்தது. காற்றிலே யுகலிப்டஸ் மணம். மரப் பாலத்தின் காப்புச் சட்டத்துக்கு அப்பால் பார்த்தால் சிற்றோடை பாறைகளில் முட்டி மோதிப் பன்னீர் தெளிப்பது போல் நீரை வாரி இறைப்பது தெரிந்தது.

இந்த எழிலைச் சற்று நேரம் ரசித்து விட்டுப் பத்மநாபன் சொன்னார்: ''நீருக்குத்தான் எத்தனை அழகு! நீர் நிலைக்கு ஓர் அழகு. நீரோட்டத்துக்கு ஓர் அழகு. தாரையாக அருவி கொட்டினால் அழகு. பனிக்கட்டியாய் நீர் உறைந்தால் தனி அழகு. வெண் பனியாகப் பொல பொலவென்று உதிர்ந்தால் அது ஓர் அலாதி அழகு!

''அணையைத் திறந்தால் தேக்கிவைக்கப்பட்ட நீர் பீறிட்டுப் பாய்ந்து ஒரு கம்பீரத்தை உணர்த்தும்; செயற்கை ஃபௌண்டனாக வைத்து விட்டால் நமக்கு விளையாட்டுக் காட்டும்! சிறு தூறலாக விழுந்து கொஞ்சும்; பெரு மழையாகப் பொழிந்து தாக்கும்! முகத்தைக் கழுவிக் கொண்டு வந்தால் களைப்பைப் போக்கும். நாவறண்டு அருந்தினால் சாந்தி தரும். அடிப்படையில் எல்லாம் ஒன்றுதான்: ஜலம்—$H_2O$.

''தாமரையோ அல்லியோ படர்ந்த குளம் நாவலாசிரியர்களுக்கு



அலுக்காத சூழல்; ஏரி நீர் நிலையாக இருக்கும்போது அதில் பிரதிபலிக்கும் மரமும் வீடும் புகைப்படக்காரர்களுக்குத் தெவிட்டாத 'ஸெட்டிங்'. படகு செலுத்தும் போது சிற்றலைகள் கிளம்பிப் பிரதிபிம்பங்களைக் கலைக்கிறதே, அதைப் பார்ப்பதில் ஒரு ருசி இருக்கிறது. பேரலைகள் கடலில் பொங்கிச் சுருண்டு சரிந்து முன்னேறி வருவதைப் பார்ப்பதிலும் ஒரு கலை இருக்கிறது. ஹொகனக்கல்லில் பார்க்கும் காவேரி நீர்தான் கொள்ளிடத்திலும் பாய்கிறது. அங்கே அடக்க முடியாத ஆவேசம்; இங்கே அது தணியப்பெற்ற அமைதி.''

அவர் இப்படிச் சொல்லிக்கொண்டே போனது அவரைச் சூழ்ந்திருந்தவர்களுக்கெல்லாம் ஓர் இன்பக் கிளுகிளுப்பை ஏற்படுத்தியது.

''நீர் நிலைக்கு ஓர் அழகு; நீர் ஓட்டத்துக்கு ஓர் அழகு என்பது போல் நீங்கள் எழுதினால் ஓர் அழகு, பேசினால் தனி அழகு!'' என்றான் ரங்கன்.

''அடடா! கொடைக்கானலுக்குக் கூடக் காக்காய் வந்து விட்டதே!'' என்றாள் மீனு. அன்று காலை ரங்கன் பேரிஜம்மில் அவனிடம் உறுதியாகப் பேசிய பிறகு அவள் புதுத் தெம்பும் உற்சாகமும் அடைந்திருந்தாள்.

அவள் கூறியதைக் கேட்டு எல்லாரும் 'கொல்'லென்று சிரித்தபோது ரங்கன், ''நான் மனப்பூர்வமாகச் சொன்னேன். இந்த மாதிரி அழகிய இடத்தையும் இவருடைய இதமான பேச்சையும் கேட்காமல் என் அப்பா ஸைக்கோ ஸாரநாதனைத் துரத்திக் கொண்டு போயிருக்கிறாரே, அதை நினைத்தால் தான் துக்கமாக இருக்கிறது'' என்றான்.

''அப்படி அவர் அடிக்கடி வெளியே போக நேர்ந்ததால்தான் நாம் நெருங்கி நெருங்கி வந்து விட்டோம்'' என்று அவனுக்கு மட்டும் கேட்கிற மாதிரி கூறினாள் மீனு. ''அவருக்கு வேலை வந்து சேராது போனால் நீங்கள் சதா அவரோடு செஸ் ஆடிக் கொண்டிருந்திருப்பீர்கள். என்னை எங்கே திரும்பிப் பார்த்திருக்கப் போகிறீர்கள்?''

''உன்னைத் திரும்பிப் பார்க்க வேண்டிய அவசியமே இல்லை, மீனு! நான் கண்ணை மூடிக் கொண்டால் கூட உன்னைத்தானே காண்கிறேன்!'' என்று பதிலுக்கு அவனும் ரகசியம் பேசினான்.

''ரங்கா! கண் மண் தெரியாமல் விசு ஓடறான் பார்! என் காலெல்லாம் அசந்து கிடக்கு. அவனைக் கட்டி மேய்க்க வேண்டியது உன் பொறுப்பு'' என்றாள் அம்புஜம்.

சிறுவனின் கையைப் பிடித்துக்கொள்வதற்காக விரைந்து சென்றான் ரங்கன். அவனுக்கு உதவுகிற பாவனையில் மீனுவும் வேகமாக நடந்தாள். முரண்டு பண்ணின அவனைச் சமாளிக்க இரண்டு பேர் தேவையாகத்தான் இருந்தது.

ரங்கனை முன்னால் அனுப்பிய அம்புஜம் கணவனைக் கேட்டாள்: ''இவா ரெண்டு பேரும் அடிக்கடி கிசுகிசுத்துக்கறதைக் கவனிச்சேளா? இது எங்கே போய் முடியப் போறதோ தெரியலையே, ஆண்டவனே! இதுக்குத்தான் அந்த மனுஷன்கிட்டே பேசுங்கோ பேசுங்கோன்னு அடிச்சுக்கிறேன். கேட்க மாட்டேங்கறேள்; பேரிஜம்மில் வெட்டு ஒன்று துண்டு ரெண்டாச் சொல்லியிருக்கலாமில்லையா?''

''என்னை என்ன பண்ணச் சொல்லறே?'' என்றார் பத்மநாபன். ''அந்த மனுஷன் இங்கே நடந்த ரெண்டு கொலைகளுக்குக் காரணமான ஒருத்தனையோ அல்லது இரண்டு நபர்களையோ பிடிக்க முடியாமல் முழிக்கிறதைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கு. இந்தச் சமயத்தில் காதல் பிரச்னையை வேறே கிளப்பி அவரைச் சங்கடப்படுத்துவானேன்னு தோணறது. ஒரு வழியா இந்தக் குழப்பமெல்லாம் தீர்ந்துட்டா அப்புறம் தயக்கமில்லாமல் பேசலாம்.''

''அலை ஓய்ந்து சமுத்திர ஸ்நானமா? இந்த ஜன்மத்துக்கு நீங்க அவர்கிட்டே பேசப் போறதில்லை'' என்றாள் அம்புஜம். ''ஸைக்கோ ஸாரநாதனாவது பிடிபடறதாவது? அதுவும் இந்த மனுஷன் கிட்டேயா?''

''அதுதான் போயிருக்காரே ஜீப்பை எடுத்துண்டு; திரும்பி வந்தால் தெரிஞ்சு போறது!''

''கையை விரிச்சுண்டுதான் வரும்'' என்றாள் அம்புஜம் அழுத்தமாக.

விசுவைத் தூக்கிக் கொண்டிருந்த ரங்கன், மீனுவோடு மேலே செல்லாமல் இவர்கள் வந்து சேர்ந்துகொள்ளக் காத்திருந்தான். அந்தப் பண்பு பத்மநாபனுக்குப் பிடித்திருந்தது.

''ஏன் மாமி! பேரிஜம் போயிட்டு வந்தப்புறம் ரெஸ்ட் எடுத்துக்கலையா? இப்படிக் களைச்சுப் போயிருக்கேளே!'' என்றான் ரங்கன். களைப்பை விடக் கவலைதான் மிகுதி அம்புஜத்துக்கு என்பதையும் அவன் அன்று காலையில் மீனு சொன்னதிலிருந்து புரிந்து கொண்டிருந்தான்.

''எனக்கு ஏதுடாப்பா ஓய்வு? ஹாலிடே யெல்லாம் இவாளுக்குத்தான். இங்கே வந்தாலும் எனக்குக் குழந்தைகளைக் குளிப்பாட்டறதும், டிரெஸ் பண்ணறதும் துணி தோய்ச்சுப்

போட்றதும்தான் காரியம் சரியா இருக்கே'' என்றாள் அம்புஜம் அலுப்பு தொனிக்க.

''நல்ல வேளை. சமைக்கிற ஜோலியாவது மிச்சமாச்சேன்னு நினைச்சுச் சந்தோஷப்படுங்க'' என்றான் ரங்கன்.

''அதுக்கும் ஒண்ணும் குறைச்சல் இல்லே. இவர் நினைச்சுண்டால் காப்பி கேட்பார். பால் பவுடரும் நெஸ்கஃபேயும் வாங்கி வைச்சுண்டிருக்கேன். இந்தப் பயலுக்கு ஹோட்டல் சாப்பாடு ஒத்துக்காது. அதைக் குறைச்சு ஹிமா ஸூப் வாங்கித் தினமும் கொடுக்கிறேன். ரூமில் எலக்ட்ரிக் கெட்டிலேயும் ஸ்டவ்வையும் மாறி மாறி உபயோகிச்சுண்டேதான் இருக்கேன். முதலாளி தனராஜுக்குத் தெரிஞ்சா வாடகையை ஒசத்திப்பிடுவான்.''

ரங்கன் சிரித்தான். ''காசிக்குப் போயும் கர்மம் தொலையலே என்கிற கதைதான்!''

''ஏதோ எனக்குப் பரிஞ்சு பேசறதுக்காக நீ ஒருத்தனாவது இருக்கியே!'' என்றாள் அம்புஜம்.

'ஏது அம்மாவுக்கு ஐஸ் வைக்க ஆரம்பிச்சுட்டீங்க போலிருக்கே' என்ற பாவனையில் மீனு ரங்கனைப் பார்த்துப் புன்னகையை வீசினாள். அதனை எதிர்கொண்டழைக்க அவனிடமும் ஒரு குறுநகை உருவாகி வந்தது. இரண்டும் சந்தித்து இணைந்ததும் ஒரு ரசாயனச் சேர்க்கை ஏற்பட்டது போலக் கலகலவென்ற சிரிப்பொலி பிறந்தது! ஆனால், 'நீ குழைஞ்சு பேசறதுக்காக நான் மசிஞ்சு போயிட மாட்டேண்டாப்பா' என்று அம்புஜம் முணுமுணுத்ததானது அந்தச் சிரிப்பொலிக்கிடையில் யாருக்கும் கேளாமல் மங்கி மறைந்து போயிற்று.

**ப**ஸ்ஸில் பேர்ஷோலா வருவதற்காக ஏறியதுமே, 'கடவுளே! அந்தப் பிள்ளையாண்டான் இன்றைக்கு நம்மோடு வராமலிருந்து விட்டால் தேவலை' என்று மனசுக்குள் பிரார்த்தித்துக் கொண்டாள் அம்புஜம். அதே சமயம் 'குறிஞ்சி ஆண்டவனே! பஸ் கிளம்பப் போகிறது. சீக்கிரம் அவரை அனுப்பி வை!' என்று மீனு இறைஞ்சினாள். வள்ளி மணாளன் ஒரு காதலியின் இதய பூர்வமான பிரார்த்தனைக்குச் செவி சாய்க்காமலா இருப்பான்? அவன் அம்புஜத்தின் கோரிக்கையை ஏற்கவில்லை.

ரங்கன் ஏறியதும் அதுவரை அழுது வழிந்து கொண்டிருந்த அந்த பஸ் ராமனையும் சீதையையும் ஏற்றிச் சென்ற புஷ்பக விமானமாக மீனுவுக்கு மாறிவிட்டது. அது மட்டுமா? ருக்மிணியைக் கண்ணன் கவர்ந்து சென்ற தேஜோமயமான ரதமாக ஒரு சமயத்திலும் சம்யுக்தையைப் பிருத்விராஜன் ஏற்றிக் கொண்டு கட்டி அணைத்தபடி பறந்து சென்ற பஞ்ச கல்யாணிக் குதிரையாக மற்றொரு சமயத்திலும் தோன்றியது!



**''என்ன சார், ஆபீஸ் பைல்களைப் பார்க்கறத்துக்குத் தெருவிலே மேஜை நாற்காலியைப் போட்டு உட்கார்ந்திருக்கிறீர்களே!''**

**''வீட்டிலே குழந்தைகள் பாட புத்தகங்களுக்கே இடம் போதவில்லையே!''**

புஷ்பக விமானத்தை விட்டு இறங்கி அவர்கள் வந்து சேர்ந்திருப்பது பேர்ஷோலா அருவிக்கா அல்லது கம்பன் வர்ணித்த சித்ரகூட பர்வதத்துக்கா?

......

**கொழித்த மாமணி அருவியோடு**
**இழிவன கோலம்**
**அழித்து மேவிய அரம்பயர்**
**அறல்புரை கூந்தல்**
**கழித்து நீக்கிய கற்பக நறுமலர்......**

என்றல்லவா எழுதியிருக்கிறான்!

அரம்பயர் எங்கே? அவர்கள் கூந்தலை அவிழ்த்ததும் உதிரும் கற்பக மலர்கள் எங்கே? அருவி கிட்டே போய்ப் பார்த்தால் அல்லவா தெரியும்?

அருவியின் அருகே அரம்பயர் போன்று பிரமாதமான ஆடை அலங்காரங்களுடன் சிலர் இருக்கத்தான் செய்தார்கள். ஆனால் அவர்கள் அருவியில் நீராடிக் கொண்டிருக்கவில்லை. பக்கத்

தில் இருந்த ஒரு மொட்டைப் பாறையில் சில ஆடவர்களுடன் சேர்ந்து சீட்டாடிக் கொண்டிருந்தார்கள்! ஓடை நீர் அடித்துக் கொண்டு போய்விட முடியாத இடத்தில் ஆனால் நீருக்குள் அமுங்கிக் கிடக்கிற மாதிரியாக ஒரு தாழ்வான கூடையில் பாட்டில்களை அடுக்கி வைத்திருந்தார்கள்.

''இது பேர்ஷோலா இல்லே, இப்போதைக்கு இது பீர் ஷோலா!'' என்றான் ரங்கன். ''கூடை நிறைய பீர் பாட்டில்கள். இந்த நீரோடை இவர்களுக்கு ஃப்ரிஜ் ஆகப் பயன்படுகிறது. தண்ணீர் ஐஸ் போலல்லவா இருக்கிறது!''

''பேஷ்!'' என்றார் பத்மநாபன். மேலே செல்ல அவருக்குப் பிடிக்கவில்லை. நின்ற இடத்திலேயே துண்டை விரித்துப் போட்டு அமர்ந்தார். அருவி விழும் காட்சி அற்புதமாயிருந்தது.

''என்ன ரங்கன்! அப்பாவிடமிருந்து நீ கிளம்புகிற வரையில் நியூஸ் ஒண்ணும் வரவில்லையா?'' என்று கேட்டார்.

''பேர்ஜும்மிலிருந்து வந்ததும் அவசரம் அவசரமாக ஜீப்பை வரவழைத்துக் கொண்டு போனவர்தான். அப்புறம் ஆளைக் காணோம். ஃபோனும் பண்ணலே. ஆனால் இன்று சாயந்திரம் பேர்ஷோலா புரோகிராம் இருப்பது அவருக்குத் தெரியும். 'நீ போயிட்டு வா! காரியம் முடிஞ்சுடுச்சுன்னு நான் ஜீப்பில் நேரே அங்கேயே வந்து இறங்கிக்கிடறேன். திரும்பி வரச்சே எல்லாரும் சேர்ந்து பஸ்ஸில் வந்திடலாம்'னு சொல்லிட்டுப் போனார்.''

''அது சரி. ஸைக்கோவுக்குக் கார் கூடவா உண்டு?'' என்று கேட்டாள் அம்புஜம்.

''தனராஜ் வர்ணிச்சதைப் பார்த்தால் ஏறத்தாழ பேப்பர்களில் வந்திருந்த அவன் படம் மாதிரித்தான் தோணிச்சு. எவனாவது ஏமாந்தவன் காரில் சாவியை வைச்சுட்டுப் போயிருப்பான். இவன் அதை எடுத்துக்கிட்டு வந்திருக்கலாமில்லையா?''

''டி. ஐ. ஜி.யை இந்த ஊரிலேயே வைச்சுண்டு இரண்டு கொலைகளைச் செய்தவன் இப்ப மட்டும் பயந்து ஓடுவானேன்?''

''எனக்கு என்ன தெரியுங்க? அப்பா வந்தால்தான் விவரம் புரியும். டி.ஐ.ஜி. இருக்கிற அதே ஓட்டலில் தானும் தங்கியிருந்து தன் கைவரிசையைக் காட்டறதுன்னு யோசனையாகத்தானே இருக்கும்?''

இப்படி இவர்கள் பேசிக் கொண்டிருக்கையிலேயே, ''ஹல்லோ மீனு! டிட் யூ ஹாவ் எ நைஸ் டைம்?'' என்று கேட்டுக்கொண்டே வந்தார் நடராஜன்.

''இந்த மொட்டைப் பயல் என்ன சொல்றான்?'' என்று மீனுவின் தலையைத் தடவிக் கொடுத்தவர் அனுசூயாவை அன்புடன் வாரி அணைத்துக்கொண்டார்.

''ஸாம்ஸனுக்குத் தலைமுடி போனதும் சக்தி குறைஞ்சிடுச்சு. இவனுக்கு நேர் ஆப்போஸிட்! மொட்டை அடிச்சதும் இவன் விஷமம் அதிகமாயிடுச்சுன்னு மீனு சொல்றா'' என்றான் ரங்கன்.

நடராஜனைச் சிரிக்கக்கூட விடாமல் பத்மநாபன் கேட்டார். ''நீங்க போன காரியம் என்ன ஆச்சு? ஸைக்கோவைப் பிடிச்சுட்டாங்களா?''

'' ஸைக்கோவா ?'' வார்த்தையை அவர் உச்சரித்தபோது கேள்விக் குறி மிதந்தது அதில்.

''பின்னே? ஸைக்கோவைப் பிடிக்கப் போறதாத்தானே சொல்லிட்டுத் தடபுடலாகக் கிளம்பினீங்க?''

''நான் எங்கே சொன்னேன் ஸைக்கோவைப் பிடிக்கப் போறதாக? அந்தத் தனராஜ் அல்லவா கத்தினான், 'ஸைக்கோவைக் கண்டு பிடிச்சுட்டேன் ஸார்! இங்கே வந்திருந்தான்!' என்று. எப்படி அந்த வதந்தி பரவியதோ என்னவோ? இங்கே எல்லோருக்கும் ஸைக்கோவைப் பற்றியே நினைப்பு. டி. ஐ. ஜி. பெயரைக் கேட்டதும் ஒருவன் பயந்து ஓடினால் அவன் அந்த ஸைக்கோவாகத்தான் இருக்கணும்னு தீர்மானம் பண்ணிட்டாங்க.''

''அப்படின்னு ஸாரநாதனைப் பிடிக்கணும் என்கிற எண்ணத்தோடேயே நீங்க புறப்பட்டுப் போகலையா?''

''ஒரு நாளும் இல்லே. ஆனால் டி.ஐ.ஜி.க்குப் பயந்து ஓடறவன் யாரா இருந்தாலும் அவனைப் பிடிச்சு விசாரிக்கணும் என்கிற நோக்கத்திலே அவசரப்பட்டேன்.''

காற்றுப் போன பலூன் மாதிரி ஆகிவிட்டனர் பத்மநாபனும் மற்றவர்களும். 'சப்'பென்று போய்விட்ட சூழலுக்குக் காரம் ஏற்ற முற்பட்ட ரங்கன் கேட்டான்: ''சரி, நீங்க துரத்திச் சென்ற ஆசாமியையாவது பிடிச்சீங்களா இல்லையா? அதைச் சொல்லுங்க.''

''அதுக்கும் ரொம்பச் சிரமப்பட்டுப் போயிடுச்சு, ரங்கா! அறை எடுக்க வந்தவன் டி. ஐ. ஜி.ன்னு சொல்லக் கேட்டதும் ஓட்டம் பிடிச்சானென்றால் அவன் பிற்பாடு இன்னொரு ஓட்டலுக்குப் போய்த் தங்க மாட்டான்; மலையை விட்டே இறங்கிடுவான்னு ஊகிச்சேன். எப்படின்னு நான் திரும்பி வந்ததும் அங்கு நடந்த விவகாரம் எனக்குத் தெரிய வரும் என்பதை அவனும்

# நீங்கள் விற்பது எதுவானாலும் சரி, பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் அதை மேலும் நன்கு விற்பனை செய்ய உதவுகிறது.



பிலிப்ஸ் அதிக பட்சமான வாடிக்கையாளர்களின் கவனத்தை உங்கள் கடையின் பக்கம் திருப்புகிறது.



உங்கள் ஜெனரல் ஸ்டோரில் பொருள்களை அதிகக் கவர்ச்சியுடன் காட்சியில் வைக்க உதவுகிறது.



உங்கள் ரெஸ்டாரெண்டில் உள்ள சூழ் நிலையைப் பிரகாசமாக்க உதவுகிறது.

**பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் 100 வாட் பல்பினைப் போல் இருமடங்கு ஒளி தருகிறது. இந்த ஒளி சிறந்ததும், பிரகாசமானதும், கூசாததுமானது, கண்களுக்குக் குளிர்ச்சி தருகிறது. இருந்தும், மின்சாரச் சிலவு ஒரு 40 வாட் பல்புக்காகும் அளவேதான்.**

இந்தக்கச்சிதமான பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் இணைப்பு ஒரு பிலிப்ஸ் 40 வாட் ஃப்ளுரோஸெண்ட் பல்ப் கொண்டது. அது சிறந்த, அதிகப்பிரகாசமான ஒளியைத் தருகிறது. பிரபலமான பிலிப்ஸ் பாலியெஸ்டர் பலாஸ்ட், ஸ்டார்ட்டர், ஸ்டார்ட்டர் ஹோல்டர் மற்றும் ஸ்ப்ரிங் இணைந்த ரோடார் லாம்ப் ஹோல்டர் இவைகளைக் கொண்டது பிலிப்ஸ் ஸ்ட்ரிப் லைட். பொருத்துவதற்கு எளிதானது. உபயோகத்திற்கு சிக்கனமானது. மேலும் சிறந்த முறையில் விற்பனை செய்ய உதவுகிறது.

**இன்றே பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் பொருத்துங்கள்—உங்கள் வீடு, கடை மற்றும் தொழிற்சாலையில்.**



**பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட்**
மூலம் அரைப்பங்கு சிலவில் இருபங்கு வெளிச்சம் பெறுங்கள்.

**பிலிப்ஸ்**




பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

PHL-3539A

உணர்ந்திருப்பான். அதனாலே ஊரை விட்டே ஓடத்தான் பார்ப்பான். அவனைத் துரத்திக்கிட்டுப் போகலாம் என்பதற்காகக் கிளம்பினேன்; ஜீப்பிலே பெட்ரோல் இல்லே!''

''கெட்டுது போ!'' என்றாள் அம்புஜம். '' புறப்படறச்சேயே அபசகுனமா?''

''பங்குக்கு விடுடான்னேன். அங்கு போனால் பத்து கார் க்யூவிலே நிக்குது. ஒரு காருக்குப் போடக்கூட அவனிடம் பெட்ரோல் இல்லே. தலையைச் சொறியறான். மலைச்சுட்டேன். முதல் நாள் காலையிலேயே மலை ஏறி வரவேண்டிய பெட்ரோல் லாரி வரலையாம். பிரேக்டவுனாம். இன்று மாலையோ அல்லது நாளைக் காலையோதான் வரும் என்று சொல்லிட்டாங்க. கொடைக்கானலுக்கே இந்த ஒரே ஒரு பங்குதான்! போலீஸ் ஸ்டேஷனிலே எமர்ஜென்ஸிக்கென்று இரண்டு டின் பெட்ரோல் எப்பவும் வைச்சிருக்கணும்னு புதுசா உத்தரவு போட்டேன்.''

''எனக்குத் தெரியும்; நான் அப்பவே சொல்லிட்டேனே! போன மச்சான் கதையாக இவர் கையை விரிச்சுண்டு தான் திரும்பி வருவார்னு'' — இப்படி மீனுவிடம் அம்புஜம் முணுமுணுத்ததானது நடராஜன் காதிலும் விழத்தான் செய்தது.

''நல்ல வேளையா நான் இன்னும் அவ்வளவு மோசமாயிடலே அம்மா!'' என்றார் நடராஜன் அவளை நோக்கி. பகுத்தறிவை உபயோகிச்சால் எந்தச் சிக்கலையும் விடுவிக்க வழி கண்டுபிடிக்கலாம். வத்தலகுண்டுக்கு ஃபோன் பண்ணி அங்கிருந்து இன்ஸ்பெக்டரை ஜீப்பில் கிளம்பி விரைந்து வரச் சொன்னேன். எதிரே வரும் ஃபியட் கார்களையெல்லாம் பார்த்துக்கிட்டு வாங்கன்னேன். நிறத்தையும் நம்பரையும் குறிச்சுக்கிட்டார். புறப்பட்டு வந்து சுலபமாப் பிடிச்சுட்டார். இவன் மலையை விட்டு இறங்கி முடியலே. ஒரு மைல் பாக்கி. அப்போ ஜீப்பை எதிரே நடு ரோட்டில் நிறுத்தி மடக்கிட்டாங்க. வகையா மாட்டிக்கிட்டான்.''

''ஆசாமி யாரு? எதுக்கு அப்படிப் பயந்து ஓடினான்?'' என்றார் பத்மநாபன்.

''கள்ளக் கடத்தல் பேர்வழி. கனகசபைன்னு பேரு. ரொம்ப நாளாத் தேடிக்கிட்டிருக்கிற ஆசாமிதான்.... பெட்டி ஒன்று கொண்டு வந்தாவில்லையா? அது நிறைய அயல் நாட்டு மது. ஜானி வாக்கர், ப்ளாக் அண்ட் ஒயிட், மார்டினின்னு நூறு ரகம்.''

''ஹாப்பி ஹாலிடேயில் பணக்காரப் பெரும் புள்ளிகள் நிறைய வருவாங்க, இந்தக் குளிர்ப் பிரதேசத்தில் அவர்களுக்குக் கதகதப்பூட்டி உதவலாமே என்கிற பெருநோக்கோடு வந்திருக்கான் பாவம்'' என்றான் ரங்கன்.

''இப்பத்தான் மதுவிலக்குக் கிடையாதே? இன்னும் எதுக்குக் கள்ளக் கடத்தல்?'' என்றாள் அம்புஜம்.

''புரொஹிபிஷனை எடுத்ததற்கப்புறம்தான் கள்ளச் சாராயம் காய்ச்சறதும், கள்ளக் கடத்தல் செய்யறதும் கூடுதலாப் போச்சு அம்மா! கடையிலே விக்கிற சாராயத்துக்கு எக்கச்சக்கமான வரி உண்டு. அதனால் அதன் விலை பலபேருக்குக் கட்டி வரதில்லே. கள்ளச் சாராயம் கொள்ளை மலிவு.''

''ஆகக் கூடி 'கள்ளச் சாராயமும் கள்ளக் கடத்தலும் அதிகமாகிப் போச்சுங்கறதாலேதான் மதுவிலக்கை ரத்து பண்ணிட்டோம்'ங்கற வாதம் செல்லாது இல்லையா?'' என்று பத்மநாபன் கேட்டார்.

''அது அரசியல் விஷயம். என்னை இழுக்காதீங்க!'' என்று டி. ஐ. ஜி. நழுவிக் கொண்டார்.

'' ஏதோ யானையைப் பிடிக்கப் போறேன்னு நினைச்சோம். பூனையையாவது பிடிச்சுண்டு வந்தேளே! அந்த மட்டும் சந்தோஷம்'' என்றாள் அம்புஜம்.

''அது சரி, யானை கண்ணில் தென்பட்டால்தானே பிடிக்கலாம்'' என்ற நடராஜன், திடும்மென்று ஞாபகம் வந்தவராக, ''எங்கே உங்க ஹிப்பி நண்பரைக் காணோம்?'' என்று பத்மநாபவிடம் வினவினார்.

'' இங்கே அருவியைப் பார்த்தால் குளிக்கணும்கிற ஞாபகம் வந்துடப் போவுதேன்னு ரூமிலேயே உட்கார்ந்திருக்கானோ என்னவோ?'' என்றான் ரங்கன்.

நடராஜன் ரங்கனுடன் சேர்ந்து சிரித்தார். மற்றவர்கள் சிரிக்கவில்லை. இரண்டு மணி நேரத்துக்கு முன்னால் ஓட்டலை விட்டுக் கிளம்பும்போது நடந்ததைப் பத்மநாபன் விவரித்தார்.

''சே! என்ன அநியாயம்! குழந்தையிடமா அப்படி நடந்து கொண்டான்?'' என்று அனுசூயாவை அணைத்தார் நடராஜன். ''டோண்ட் வொர்ரி! நான் உனக்குப் புதுசா ஒரு காமிரா வாங்கித் தரேன்; ஆல்ரைட்?''

அனுசூயா அழகாகத் 'தாங்க்ஸ்' சொல்லித் தன்னை அவரிடமிருந்து விடுவித்துக் கொண்டாள்.

நேரமாகி விட்டதென்று எல்லாரும் பஸ்ஸை நோக்கி நடந்தார்கள்.

(தொடரும்)

# பேறு காலத்தில் பெண்களுக்கு பேருதவி பிரஸ்டீஜ்

தாயாகப் போகிறீர்களா?
எங்கள் மனமார்ந்த
வாழ்த்துக்கள்.

பிறக்கவிருக்கும் அந்த
சின்னஞ்சிறு குழந்தைக்கு
நீங்கள் இப்போதே ஆவன
செய்யுங்கள். அதற்கு
நேரம் செலவிட்டு நீங்கள்
ஆனந்தமடைய நாங்கள்
வகை செய்கிறோம்.

பிறக்கும் குழந்தைக்கு
உடை தைக்கவேண்டும்.
சாக்ஸ், போன்றவை
பின்னவேண்டும். அதற்
கெல்லாம் பிரஸ்டீஜ் பிரஷர்
குக்கர் அவகாசம் தருகிறது.

பேறு காலத்திலேயே ஒரு
பிரஸ்டீஜ் குக்கரை
வாங்குங்கள். பிறகு
குழந்தையின் பாலூட்டும்
புட்டிகளை சுத்தப்படுத்தவும்
பிரஸ்டீஜ் மிகவும் உதவுகிறது.



பிரஸ்டீஜ் பற்றி
உங்கள் டீலரிடம்
பேசுங்கள்.
தேர்ந்தெடுக்க 6 வித
அளவுகள் மட்டுமின்றி
ஸ்கில்லெட்டுகள்,
சாஸ்பான்கள்,
ஸ்டீம்-இட் போன்ற
பல ப்ரீத் பொருள்
களும் கிடைக்கும்.







இரண்டும் ஒன்றே

டிடி. (பிரைவேட்) லிமிடெட்
பெங்களூர்-16

TTP/7085













செங்கோட்டையைச் சற்று நேரம் சுற்றிப் பார்த்து விட்டுக் காரில் ஏறினர். வேறு புறத்தில் ஒரு டாக்ஸி பிடித்து பழைய தில்லியைச் சேர்ந்த சாந்தினி சௌக் வழியே சென்றார்கள். ஓரிடத்தில் வண்டியை அனுப்பி விட்டுக் கால் நடையாக அகிலாச் சந்து பொந்துகள் வழியே அழைத்துப் போனான் ஸி.ஐ.டி.யும். ஒரு வழியாக அந்த ரகசிய இடத்துக்கு வந்து சேர்ந்தனர்.




தொடரும்.....

## திருமணம்



வேலூர் (வ.ஆ.) பாலாஜி புக் ஹவுஸ் உரிமையாளர் திரு எம். ஜி. கேசவ முதலியார் அவர்கள் குமாரத்தி செல்வி நாரணிக்கும், சென்னை திரு P. துரைசாமி முதலியார் அவர்கள் குமாரர் செல்வன் D. ஆறுமுகத்துக்கும் வேலூரில் திருமணம் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!

## ஸ்ரீ வீரபத்ர ஸ்வாமிக்கு வெள்ளிக் கவசம்

பாடல் பெற்ற பதிகளிலே, தஞ்சாவூர் மாவட்டத்தைச் சேர்ந்த திருவிடைமருதூர் மத்தியார்ஜுன க்ஷேத்திரம் என்று போற்றப்படும் புனிதத்தலமாகும். இங்கு உறைந்திருக்கும் ஸ்ரீ வீரபத்ர ஸ்வாமி பிரத்யக்ஷ தெய்வம். இவருக்கு வெள்ளிக் கவசம் செய்து சாத்த முயற்சி நடைபெற்று வருகிறது. ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் இப்பணி நிறைவேற எனக்கு ஸ்ரீமுகம் வழங்கி வாழ்த்தியுள்ளதோடு, வருகிற பொங்கலுக்குள் (மகரசங்கராந்தி) நிறைவேற வேண்டும் என்று விருப்பம் தெரிவித்துள்ளார்கள். ஆஸ்திக மக்கள் அனைவரும் தங்களால் இயன்ற நிதியைப் பணமாகவோ, வெள்ளியாகவோ வழங்கி ஸ்ரீ வீரபத்ரரின் அருளுக்குப் பாத்திரமாகக் கோருகிறேன்.

நிதி அனுப்ப வேண்டிய விலாசம் :

டி. என். வேங்கடராமன் (PTI)
B/45, ஏர்போர்ட் காலனி
மீனம்பாக்கம், சென்னை - 27



# விளக்கு!

காதல் சரவிளக் கேற்றுகிறேன்; - தெய்வம்
காணும் சரவிளக் கேற்றுகிறேன், - பெரும்

மோதலும் நோதலும் மூண்டபுடினும் - விழி
முட்ட எழும் கண்ணீர் கொட்டி நெய்யாய்க்

காதல் சரவிளக் கேற்றுகிறேன்; - தெய்வம்
காணும் சரவிளக் கேற்றுகிறேன்.

காவிய மாவிளக் கேற்றுகிறேன்; - உயிர்க்
காலத்தின் மாவிளக் கேற்றுகிறேன், - என்றன்

ஆவியுள் ளும்புறம் அத்தனையும் - உணர்(வு)
ஆகவே நெஞ்சை உருக்கி நெய்யாய்க்

காவிய மாவிளக் கேற்றுகிறேன்; - உயிர்க்
காலத்தின் மாவிளக் கேற்றுகிறேன்.

உரிமைத் திருவிளக் கேற்றுகிறேன்; - ஜீவ
உலகத் திருவிளக் கேற்றுகிறேன் - என்றும்

பெருமை கொள் வெம்போர்ப் புரட்சிஎலாம் - சிந்தப்
பெறினுமே ரத்தம் சொரிந்து நெய்யாய்

உரிமைத் திருவிளக் கேற்றுகிறேன்; - ஜீவ
உலகத் திருவிளக் கேற்றுகிறேன்.

புகழின் மணிவிளக் கேற்றுகிறேன்; - என்றும்
பொய்யா மணிவிளக் கேற்றுகிறேன் - நீண்டு

நிகழுமென் வாழ்வையே தியாகமெனும் - காலத்
திரிவிடை இட்டதோர் வெள்ளி நெய்யாய்ப்

புகழின் மணிவிளக் கேற்றுகிறேன்; - என்றும்
பொய்யா மணிவிளக் கேற்றுகிறேன்.

என்னையே நான்விளக் கேற்றுகிறேன்; - ஆம்
இறவாத வான்விளக் கேற்றுகிறேன் - மிகத்

தன்னையே மாற்றும் தருக்கரைப் போல் - இன்றித்
தாங்கிய கொள்கை மேல் கோபுரமாய்

என்னையே நான் விளக் கேற்றுகிறேன்; - ஆம்
என்றென்றும் வான்விளக் கேற்றுகிறேன்.

— தமிழழகன்

எங்கள் செல்வன் ராம்குமாரின் பிறந்த நாள் விழா எளிமையாகக் கொண்டாடப்பட்டது. ஆடம்பரமாகக் கொண்டாட வேண்டும் என்பதுதான் சிகிச்சையாளர் மற்றும் சிப்பந்திகள் இவர்களின் ஆவல். ஆனாலும் டாக்டரின் ''விருப்பம்'' என்பது எதையும் புறக்கணிக்க அவர்களால் முடிந்ததில்லை. டாக்டர் அப்படியொன்றும் கோபக்காரர் அல்ல. 'தங்கள் தெய்வம்' என்று போற்றும் அவரது விருப்பம் எதையும் மீறும் துணிவு எவருக்கும் ஏற்பட்டதில்லை. மலர்ந்த அவரது முகத்தில் சிறு வாட்டம் ஏற்படுத்திக் காணும் இதயம் எங்களில் எவருக்குமே கிடையாது.

பழக்கத்தில் அலுவல்கள் நடக்க, மன எண்ணத்தில் என்னுடையவர்களின் நினைவுகளே சுழன்று கொண்டிருந்தன. எனது அலுவல்கள் முடிந்து, வழக்கமாக நான் ஓய்வு கொள்ளும் நித்தியமல்லிப் பந்தலின் கீழ் வந்து அமர்ந்த போதும் மனம் ஓய்வு கொள்ள மறுத்தது. இளம் வயதிலிருந்தே மனத்தில் பதிந்து வேர் கொண்டு விட்ட எனது லட்சியத்தை 'அவரது விருப்பம்' என்பதற்காக நான் துறக்க முற்பட்டது..... அவரது பெரும் குணம்...கடந்த பல நினைவுகளில் நான் என்னை மறந்தேன்.







துள்ளித் திரியும் பருவத்தில் எனது லட்சியம் என்னுள் முளைவிடத் தொடங்கிவிட்டது. ''வேறு ஆபரணம் வேண்டாம்! இதயத் துடிப்பை அளந்து காட்டும் அந்தக் குழல் ஆபரணத்தை அணிந்தே ஆகணும்.'' இதுவே என் இளம் உள்ளத்தில் முளைவிட்ட ஆசை.

இந்த எனது ஆசையை மகிழ்வோடு அங்கீகரித்தார் தந்தை. ஆசை நிறைவேற ஆசியும் அங்கீகாரமும் அளித்தார். என்றும் வாடாத புன்னகையால் தன் அங்கீகாரத்தையும் ஆசியையும் அளித்தாள் தாயார்.

இருபது வயதில் ஐம்பது வயதுள்ளவரைக் கைப்பற்ற நேர்ந்த என் தாய்க்கு, தனது இலட்சியக் கனவுகளை உள்ளழுத்தி மறைக்கும் கனமான திரையாக அந்தப் புன்னகை உதவியிருக்கலாம். நினைவு தெரிந்த நாளிலிருந்து, நான் என் தாயின் முகத்தில் கண்ட அந்தப் புன்னகை சற்றும் வாடியதில்லை.

வேண்டாத காலத்தில் வந்தவள் என்று சிற்றன்னையை வெறுப்பவர்கள் என் அண்ணன்மார்கள். அருமைத் தங்கை என்றாலும் காலம் தவறிப் பிறந்து விட்ட எனக்கும் அவர்கள் கசப்புக் கிடைக்காமலா போய்விடும்? என்னை மருத்துவக் கல்லூரியில் சேர்க்கத் தந்தை ஏற்பாடு செய்வதை அறிந்ததும் அவர்கள் கசப்பு செயலாகப் பரிணமித்தது. ''பூர்வீகச் சொத்துக்கள் தங்களைச் சார்ந்தவை'' என்று தந்தையோடு வாதாடவும் ஒன்றாக வந்து விட்டார்கள். அப்பா முகம் களிக்கவில்லை. சொத்தில் சிறு பாகம் கூடத் தனக்கு வேண்டாம் என்று கூறிவிட்டதுடன் வஞ்சகமின்றிப் பாகப் பிரிவினையும் செய்து கொடுத்து அவர்களை மகிழ்ச்சியோடு அனுப்பி வைத்தார். அப்போதும் எனது தாயாரின் புன்னகை மாறவில்லை.

சொந்த சம்பாத்தியத்தில் அப்பா கட்டிய வீடும், அவரது ஓய்வுக் காலத்தில் கிடைத்த சேமிப்புப் பணத்தின் வட்டியும் சிறு பென்ஷனுமே எங்கள் ஜீவ ஓட்டத்துக்கு உறுதுணையாக நின்றன. அப்பா மலைக்கவில்லை. அம்மா அதிர்ந்துவிடவில்லை. அப்பா சிக்கனத்தை மேற்கொண்டார்; அம்மா தனது தையற் கலையை நினைவுக்குக் கொண்டு வந்தாள். ஆக அவர்களது அன்பும், பரிவும், சிக்கனமுமே எனது லட்சியத்தைத் தொடரத் துணையாக நின்றன. நானும் நிம்மதியாக எனது லட்சியத்தைத் தொடர்ந்தேன்.

மனித எண்ணப்படியே காலம் ஓடி விட்டால், அந்த மாபெரும் சக்தியை மனித மனம் எப்படிக் காண முடியும்?

வயதால் தளர்ந்துவிட்ட தந்தை ஒரு நாள் படுத்து விட்டார். வைத்திய சிகிச்சைக்குக் கட்டுப்படாமல் அவரது வியாதி அதிகரித்து வந்தது. தன் ஏற்பாடுகளைத் தாய்க்குத் தெளிவாக்கிச் சொன்ன தந்தை, வியாதியோடு அதிக நாட்கள் போராடவில்லை.

அப்பாவின் பணியையும் அம்மாவே மேற்கொண்டாள். அதனால் எனது இலட்சியக் கனவு சிதையாமல் முன்னேறியது. அப்பாவின் மறைவுக்குப் பிறகு அம்மா அடிக்கடி என்னிடம், ''பெண் என்னதான் படித்துப் பட்டம் பெற்றாலும் ஒருவன் கைப்பற்று முன் அவளது வாழ்க்கை நிறைவு பெறுவதில்லை'' என்பாள். அம்மாவின் கவலை எனக்கு உறைக்காமல் இல்லை.

இப்படியே காலம் ஓடும்; எனது இலட்சியத்தையும் அடைந்து அம்மாவின் கவலையையும் தீர்த்து விடலாம் என்றுதான் இருந்தேன். ஆனால் 'நியதி' வேறு விதமாக இருந்தது.

எனது தாயின் சகோதரர் மாரடைப்பினால் காலமாகி விட்டார் என்ற செய்தி வந்த அன்று அம்மா அப்படியே அதிர்ந்துபோய் விட்டாள். எதற்கும் தளராத எனது தாயாரின் உள்ளம் இந்த அதிர்ச்சியினால் மிகவும் தொய்ந்து தவித்தது. எனது தகப்பனார் தாயின் ஆதரவுக்காக எங்களிடம் அதிக அக்கறை கொண்ட மாமனிடமே ரொக்கச் சேமிப்பு முழுதும் கொடுத்து, எங்கள் எதிர்காலத்தையும் அவரிடமே ஒப்படைத்திருந்தார். நடுத்தர வயதினரான மாமன் திடீரென்று இறந்ததும் அம்மா அதிர்ந்து போனாள்.

அம்மாவின் உடன்பிறந்தவர்கள் இருவர். மூத்தவருக்கு ஒரே பையன். அவன் பிறந்த கொஞ்ச நாட்களில் அவனது அன்னை இறந்து விடவே தாயற்ற சேயை அன்று கன்னியாக இருந்த எனது தாயே வளர்த்தாள். தாம் மறுமணம் செய்து கொள்ளாமல் நமது தம்பிக்கு மணம் செய்து வைத்துத் தம்முடன் வைத்துக் கொண்டார் அண்ணன். ஆனால் தம்பியின்



கரம் பற்றி இல்லம் நுழைந்தவளோ கொலைக்கும் அஞ்சாத கொடியவளாக இருந்தாள். தாய், தந்தையற்று, அண்ணன்மார்கள் ஆதரவில் இருந்த எனது தாயார் சின்ன அண்ணியின் கொடுமையைத் தாங்க முடியாமல்தான் வயதான என் தந்தையை மணக்கத் துணிந்தாள். மனைவியற்ற பெரிய அண்ணா மட்டுமே தம் தங்கையைப் பார்க்க வருவார். அவர் தம் மகனை ஹாஸ்டலிலே விட்டுப் படிக்க வைத்திருந்தார். மருத்துவக் கல்லூரியில் படிக்கும் மாமன் மகன் மகேஷ் இவ்வருடத்துடன் படிப்பைப் பூர்த்தி செய்துவிடுவார். இவை அம்மா சொன்ன விவரங்கள். அகால மரணமடைந்த மாமா ரொக்கப் பணத்துக்கு எப்படி ஏற்பாடு செய்வார்? அது அக்கொடியவளின் கைக்குப் போய்விட்டால் மீள வழியேயில்லை என்ற பெரும் கவலைதான் அம்மாவைப் பெரிதும் பாதித்தது. அந்தக் கவலையால் அம்மாவுக்கு அடிக்கடி மயக்கம் கூட வரத் தொடங்கியது. மாறாத அந்தப் புன்னகையும் மாறியது.

எப்படியோ இரு மாதங்கள் கடந்துவிட்டன. 'வெற்றி காண்பது கடினம்' என்ற மூன்றாவது ஆண்டு மருத்துவப் பரீட்சையிலும் நான் வெற்றி கண்டேன். எனது இலட்சியத்தின் முதல் படியான ''ஸ்டெதாஸ்கோப்'' என்ற அரும் ஆபரணத்தை அணிந்துகொண்டு ஆரம்பமாக வேண்டிய படிப்பு. மற்ற செலவுகளையும் சமாளிக்க வேண்டும். அதற்கு ஒரே வழி மாமன் இருந்து, இறந்த இடம் சென்று விஷயத்தை அறிந்து வருவதுதான். ஆனால் அம்மா அந்தக் கொடியவள் உள்ள இடத்துக்கு என்னை அனுப்ப மனம் நடுங்கினாள். அம்மாவின் தேக நிலையோ நாளுக்கு நாள் மோசமாகி வந்தது. வேறு வழியின்றிப் பலமான எச்சரிக்கை, ஆத்திரம் கொள்ளாதிருக்க வாக்குறுதி இவைகளுடன் என்னை அனுப்பச் சம்மதித்தாள் அம்மா.

அக்கம் பக்கம் உள்ளவர் துணையையும், டாக்டர் துணையையும் நம்பி அம்மாவை விட்டு விட்டுத் தஞ்சாவூரை நோக்கிப் பயணமான எனக்கு ஏதோ ஒரு துப்பைத் துலக்கப் போகும் பெருமையால் உள்ளம் துள்ளியது. 'இளம் கன்று பயமறியாது' என்பது போல அம்மாவின் பயம் எனக்கு அர்த்தமற்றதாகத் தோன்றினாலும், அம்மாவின் எச்சரிக்கையை அலட்சியம் செய்யக் கூடாது என்ற உறுதியுடன் வண்டி ஏறினேன்.

திடமும், உறுதியும் கொண்ட மனத்துடன் அறிமுகம் அற்ற அந்த இல்லத்துள் மெள்ள நுழைந்தேன். என்னைக் கண்டு திகைத்த மாமன் மாமி முன் மிகக் குழைவோடு, பவ்யமாக என்னை நானே அறிமுகப்படுத்திக் கொண்டேன். அவர்கள் திகைப்பை நீக்கி, இணக்கத்தை ஏற்படுத்தினேன். என் முயற்சி வெற்றி கண்டது. ''அப்படியா! வாம்மா; அப்படியே உன் தாயை உரித்துக் கொண்டு பிறந்திருக்கிறாயே!'' என்று என்னை வரவேற்றாள் மாமி.

ஒரு சில தினங்களில் அந்த வீட்டிலுள்ள அனைவரது அன்பையும் சம்பாதித்துக் கொண்டுவிட்டேன். சமயங்களில் மாமியின் கொடிய சித்தம் வெளிப்படும் போது எனது உடல் நடுங்கும். கூடிய விரைவில் எனது அலுவலை முடித்துக் கொண்டு கிளம்பி விடுவதே நல்லது என்று தோன்றியது.

வீட்டின் ஒவ்வோர் இடத்தையும் ஒழுங்குபடுத்தியவள் கடைசியாக எனது பெரிய மாமனின் அறையைச் சீராக்கும் சாக்கில் விஷயத்தை அறியத் தொடங்கினேன். பல மணி நேர உழைப்பால் அறைதான் சீர்ப்பட்டது. விஷயம் சீர்ப்படவில்லை. பாண்டிச்சேரி மருத்துவக் கல்லூரியில் படிக்கும், பெரிய மாமனின் மகன் மகேஷ் தந்தைக்கு எழுதியிருந்த கடிதங்கள் சில கிடைத்தன. ''நீங்கள் நேரில் சொன்னது, இப்போது எழுதியது எல்லாவற்றையும் நன்கு நினைவு வைத்துக் கொள்வேன்.... உங்கள் அன்புக் கட்டளையையும் என்னால் முடிந்தவரையில் நிறைவேற்றுவேன்; எனக்கிருக்கும் ஒரே உறவை மறக்க மாட்டேன், உங்கள் கட்டளையை அலட்சியப்படுத்தவே மாட்டேன். அதைரியப்படாமல் இருங்கள். உங்களுக்குக் குணமாகிவிடும்'' என்று இப்படி ஏதேதோ இருந்தன. எங்கள் பண விஷயம் பற்றி ஒன்றுமே கிடைக்கவில்லை.

நாட்கள் வாரங்களாகின. ஓயாத எனது உழைப்பால் மாமியின் எடைதான் ஏறியது.

மனத்திடமும், பொறுமையும் என்னைக் கைவிடத் தொடங்கிய அன்றுதான் முன் அறிவிப்பு ஏதுமின்றி வந்து இறங்கினார் எனது மாமன் மகன் மகேஷ். சியாமள மேனியும், கம்பீரமான முகமும், அறிவு விகசிக்கும் விழிகளும் கொண்ட கம்பீர புருஷனைக் கண்டபோது, அடக்கம் என்னை ஆட்கொண்டது. பேசவும், கேட்கவும் துடித்துக் கொண்டிருந்த நாக்கு கட்டிப் போட்டாற்போல் அடங்கிக் கிடந்தது.

வீட்டில் நுழைந்து குசலம் விசாரித்தவர், புது நபராக நின்ற என்னைக் குழந்தைகள் அறிமுகம் செய்தும்கூட ஏறெடுத்துப் பார்க்கவோ, விசாரிக்கவோ இல்லை.

முன்னறிவிப்பு இன்றி வந்த மாதிரியே, முன்னறிவிப்பு ஏதுமின்றி அன்று புறப்படப் போவதாக அறிவித்தார் அம் மாமன் மகன். நான் என் மனத்தைத் திடம் செய்துகொண்டு மகேஷ் இருந்த அறைப் பக்கம் வந்தேன்; படபடக்கும் இதயத்தை ஆசுவாசப்படுத்தியபடி அறையுள் நுழையவிருந்த என்னைத் தடுத்து நிறுத்தியது, உள்ளிருந்து கேட்ட சம்பாஷணை.

''எப்படியும் இந்தப் பெண்ணைக் காப்பாற்ற வேண்டியது நம் கடமைதானே மகேஷ்?'' மாமியின் குரலில் உருக்கம் இழைந்தது.

''ஐயோ, சித்தி! உனக்கு ஒன்றுமே தெரியவில்லையே! இந்தப் பெண்ணை நாம் வைத்துக் கொள்வதே பெரிய ஆபத்து சித்தி! இந்தப் பெண்ணின் அண்ணன்மார்கள் ரொம்பப் பொல்லாதவர்கள்; எங்கள் தந்தை சொத்தை விற்றுவிட்டார்கள் என்று கோர்ட்டில் வழக்குப் போடுவார்கள். முதலில் அந்தப் பெண்ணை ரயிலேற்றிவிட்டு, மறு காரியம் பார்.'' — இது மாமன் மகன்.

''அப்படியா மகேஷ்! இதெல்லாம் எனக்கு என்ன தெரியும்? அப்போ, அந்தப் பெண்ணை

இன்னுமொரு குழந்தையைப் பெறுவதற்குமுன் சற்று

# யோசியுங்கள்

முதலில் இந்தக்
குழந்தையை நன்றாக
வளர்க்க வேண்டாமா?

இக்குழந்தையை நன்றாக படிக்க வைக்க வேண்டாமா? உங்கள் விருப்பப்படி, குழந்தைக்கு வசதிகள் அனைத்தும் அளிக்க வேண்டாமா? இன்னொரு குழந்தையை உடனே பெற்றால், இதெல்லாம் முடியுமா? சிரமம் தான். அடுத்த குழந்தை உடனே வேண்டாம் என்று நீங்கள் கருதுவது இயற்கைதானே.

நீங்கள் மட்டுமல்ல; உலகெங்கிலும் தம்பதிகள் இவ்விதம்தானே கருதுகிறார்கள். வளமுடன் வளர்க்க வசதிகள் பெருகும் வரை, அவர்கள் இன்னொரு குழந்தையைப் பெறுவதில்லை. நீங்களும் நிரோத்' உபயோகித்து குழந்தை பெறுவதைத் தள்ளிப்போடலாம். அனைவரும் விரும்பி ஏற்கும் ப்பர் கருத்தடைச் சாதனம் நிரோத்; இது ஆண்களுக்கானது. தலைமுறை தலைமுறையாக உபயோகத்தில் இருந்துவரும் சிறந்த, எளிய, பாதுகாப்பான கருத்தடைச் சாதனம் நிரோத். நீங்களும் நிரோத் உபயோகியுங்கள்.

நிரோத் எங்கும் கிடைக்கிறது. அரசாங்க ஆதரவு விலை 15 பைசாவுக்கு 3



இன்னொரு குழந்தையை வளர்க்க வசதி பெறும் வரை
உபயோகியுங்கள்

## நிரோத்

லட்சக்கணக்கான பேர் விரும்பி ஏற்கும் எளிய, பாதுகாப்பான கருத்தடைச் சாதனம் நிரோத்.



davp 71/460

பலசரக்குக் கடைகள், மருந்தகங்கள், வெற்றிலைபாக்குக்கடைகள் இங்கெல்லாம் நிரோத் விற்பனையாகிறது



'' நான் சிவாஜி ரசிகன்.''

'' நான் எம். ஜி. ஆர். ரசிகை.''

'' மு. க.வின் பேச்சு எனக்குப் பிடிக்கும்.''

'' காமராஜ் என் தலைவர்.''

'' ஸ்வீட்தான் எனக்குப் பிடிக்கும்.''

'' காரம்தான் எனக்கு ஆகாரம்.''

'' எனக்குப் பிடித்த கலர் சிவப்பு.''

'' எனக்குப் பச்சைதான்.''

'' சே! எனக்கு உன்னைப் பிடிக்கலே.''

'' சே! எனக்கும் உங்களைப் பிடிக்கலே.''

'' அப்பாடி! இந்த விஷயத்திலாவது நாம் ஒற்றுமையாக இருக்கிறோமே! எப்ப நம்ம கல்யாணம்?''

---

நீ அழைத்துப் போய்ப் பத்திரமாய் அவள் அம்மாக்காரியிடம், நகை நட்டோடு ஒப்புவித்து விடப்பா; நமக்கு வம்பு எதற்கு ?''

''என்னால் அழைத்துப் போக முடியாது, சித்தி !'' என்று வெடுக்கென்று பதில் தந்தவர், சிறிது யோசனைக்குப் பிறகு, '' ஒன்று செய்தால் என்ன ? நமக்குச் சொந்த 'டிஸ்பென்சரி' தொடங்கச் சென்னையில் ஒரு வீடு இருந்தால் ரொம்ப சௌகரியம் சித்தி. நான் நீ சொல்கிறபடி சென்னை சென்று இந்தப் பெண்ணின் அம்மாவுக்கு வைத்தியம் செய்யும் சாக்கில், வீடு யார் பெயரில், எப்படி என்பதையும் தெரிந்து கொள்கிறேன். பிறகு பக்குவமாய் இந்தப் பெண்ணையும் அநாதை விடுதியில் சேர்த்துவிட ஏற்பாடும் செய்கிறேன். இவள் அம்மாவையும் தர்ம ஆஸ்பத்திரியில் சேர்த்துவிட்டோ, இல்லை வியாதியை முற்ற வைத்துத் தீர்த்தோ விடலாம். வைத்தியச் செலவுக்கும், மற்றும் பல வகைச் செலவுகளுக்கும் கடன் கணக்கைக் காட்டி, வீட்டை வயப்படுத்திக் கொண்டால், நமக்கும் ரொம்ப சௌகரியம்; கொஞ்சம் பொறுத்திருந்தால் மாதம் இருநூறு அல்லது முந்நூறு வரை இங்கு என்னால் அனுப்ப முடியும், சித்தி !'' என்று முடித்திருந்தார்.

அந்தக் கிராதகரின் சொல்லால் சித்தி பெற்ற ஆனந்தத்தை நான் பார்க்க முடியவில்லை. அந்த வஞ்சக மனிதனுடன் நானும் புறப்படத் துரிதப்படுத்தினாள் அந்த வஞ்சகி. நானும் அரும்பாடுபட்டு எனது உள்ளத்தை ஒளித்த வண்ணம், 'விட்டது தொல்லை' என்று புறப்பட்டேன்.

கூண்டிலிருந்து விடுதலை கண்ட பறவை போல் வீட்டுக்குள் நுழைந்தவன், தாயைக் குசலம் விசாரித்துவிட்டுக் குளிக்கச் சென்று விட்டேன். நான் எனது அலுவல்களை முடித்துக் கொண்டு, மெதுவாக வந்த பொழுது, ''என்னம்மா இது! வந்த விருந்தாளியைக் கவனிக்காமல் இப்படி அலட்சியம் செய்வார்களா?'' என்று கடிந்தாள் அம்மா.

'' அத்தை, நான் விருந்தாளி இல்லை, அத்தை ! இனி இக்குடும்பத்தில் நானும் ஒருவன்தான்'' என்று குழைந்தார் அம்மாவின் ஆசை மருமகன்.

அம்மாவின் உடல் நிலை மிக மோசமாக இருந்ததால் விஷயத்தை அம்மாவிடம் விளக்குவதும் தவறு என்று பட்டது. இரவு என் அலுவல்கள் முடிந்து முன் அறைக்கு வந்தவள் திடுக்கிட்டேன். அந்த வஞ்சகர் தம் வஞ்சக நோக்கை நிறைவேற்றத் தகுந்த காரியத்தை இன்றே தொடங்கிவிட்டார்.

'' கோகிலா ! கொஞ்சம் வெந்நீர் கொண்டு வா. அம்மாவுக்கு ஓர் இன்செக்ஷன் கொடுக்கணும்'' என்றார், சற்றும் தடுமாற்றமின்றி.

''இதோ பாருங்கள் ! சகலத்தையும் இழந்து நிற்கும் எனக்கு இருக்கும் ஒரே ஆஸ்தி என் தாயார்தான். அந்த எனது தெய்வத்தை, 'தீர்த்துக்கட்ட' உங்களை அனுமதித்துவிட்டு நான் சும்மா இருந்துவிடமாட்டேன்'' என்று ஏகத்தாளமாகச் சொன்னவள் அவரை அலட்சியமாகப் பார்த்தேன்.

அப்படியே சிறிது நேரம் திகைத்துத் தடுமாறியவர், தம்மைச் சமாளித்துக் கொண்டு புன்னகையுடன், ''ஓ! சித்தியிடம் நான் சொல்லிக் கொண்டிருந்ததைக் கேட்டாயா? அதுதான் உனக்கு என் மீது இத்தனை கோபம் ஏற்படக் காரணமா ?'' என்றவர் தம் கையில் உள்ள பொருள்களை மேஜையின் மீது வைத்தார். ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு அதில் உட்கார்ந்தார்.

''கோகிலா, உட்கார் ! நான் சொல்லும் விஷயத்தை முழுதும் கேள். உன் மாமாவுக்கு எப்பொழுதும் உன்னைப் பற்றிய நினைவும், அத்தையைப் பற்றிய கவலையுந்தான். உங்கள் பணத்தை அவர் இரு மடங்காக்கி என்னிடம் ஒப்படைத்துள்ளார். துரதிருஷ்டவசமாக அவர் அகால மரணமடைய நேர்ந்துவிட்டால், கொடிய சித்தமுள்ள உன் சித்திக்குத் தெரியாமலே உங்களை நான் ஆதரிக்க வேண்டும் என்று கடிதம் எழுதினார். சித்தி புரிந்துகொள்ளாத வகையில், தந்தை நம்பிக்கை கொள்ளும் வகையில் நானும் பதில் எழுதுவேன். உன் சோதனையில் நீயும் அதைப் படித்திருப்பாய். உன் மாமா காலமானதும் விவரமாகக் கடிதம் எழுத எனக்கு அவகாசம் இல்லை. எப்படியும் இரண்டொரு மாதங்களில் என் மருத்துவப் படிப்பு முடிந்துவிடும், நேரில் வந்தே விஷயத்தைக் கவனிக்கலாம் என்றுதான் இருந்தேன். தந்தையை இழந்த துக்கத்தை ஆற்றும் மருந்தாக அத்தையைக் காணும் ஆவலோடும், சித்திக்குக் கூற வேண்டிய கற்பனையோடும் தஞ்சை வந்தவனுக்கு, 'சிங்கத்தின் குகையில் அகப்பட்ட மானுக' நீ அங்கு இருப்பதைக் கண்டதும் நடுக்கம் ஏற்பட்டது. எப்படியும் சீக்கிரமே இங்கு வந்து, 'அத்தையைக் கொண்டு தந்தியடித்து உன்னை வரவழைத்துவிடணும்' என்ற

பரபரப்பில்தான் அன்று திடுமென்று புறப்பட்டேன். என் நிலைக்கு இரங்கிய இறைவன் சித்தி மூலமே வழி வகுத்து, உன்னை உடன் அழைத்து வரவே ஏற்பாடு செய்துவிட்டார். இதுதான் விஷயம்'' என்று நிறுத்தினர்.

உடலுக்கு மருந்தின் மூலமும், உள்ளத்துக்கு ஆதரவான வார்த்தைகள் மூலமும் சிகிச்சை தந்த அந்தச் சியாமளா மேனி டாக்டர் நம் அத்தையின் உயிரைக் காப்பாற்றியதுடன், அவளைச் சீக்கிரமே எழுந்து நடமாடவும் செய்து விட்டார். அந்தப் பொல்லாத டாக்டரின் குணமறிந்து, குறிப்பறிந்து பணி செய்து நானும் எனது நன்றியை, மகிழ்ச்சியை மௌனமாகவே தெரிவித்துக் கொண்டிருந்தேன்.

எதிர்கால ஆனந்தம் என்ற மனக் கோட்டையில் சிறைப்பட்டிருந்த என்னை அவரது குரலே சிறை மீட்டது.

''கோகிலா! அத்தை விஷயத்தைச் சொன்னார்கள். உனக்குச் சம்மதம் என்று கேட்டதும் எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி ஏற்பட்டது. கல்யாணம் என்ற பந்தம் வாழ்நாள் முழுதும் இருவரைச் சேர்த்துப் பிணைக்கும் ஓர் அற்புதமான ஒப்பந்தம். உணர்ச்சி வசப்பட்டோ, ஆலோசியாமல் அவசரப்பட்டோ அந்த ஒப்பந்தத்தை ஏற்றுக் கொள்வது கூடாது என்பதே என் எண்ணம். மருத்துவப் பணியை மேற்கொள்ளப் போகும் எனக்குக் கடமைகளும் நிறைய உண்டு. கடமையின் பளுவால் நான் நிறையவே உழைக்க வேண்டும் என்று இருக்கிறேன். கடும் உழைப்பால் உள்ளமும் உடலும் சோர்ந்து வீட்டுக்குள் நுழையும்போது அங்கே சோர்வைப் பறக்கடிக்க இன்முகத்துடன் காத்திருக்கும் 'கிருகலக்ஷ்மி'யையே நான் என் மனைவியாகக் காண வேண்டும். இதுவே என் கொள்கை, ஆவல் எல்லாம். ஆகையால் என் மனைவி ஒரு டாக்டராக முடியாது'' என்று நிறுத்தினர்.

எனது எதிர்காலம் பற்றிய மனக் கோட்டைகள் மட மடவென்று சரிந்தன. எனது லட்சியம்? சொல்வதறியாது திகைத்துப் போய் நின்றேன். அவரே என்னை ஆசுவாசப்படுத்தினர்.

''கோகிலா! ஒரு டாக்டர் ஆகணும் என்ற உனது லட்சியத்தைப் போற்றுகிறேன்.. அதை நான் அவமதிப்பதாக நினைக்காதே. என் நிலைமையை விளக்கினேன். நீ உன் லட்சியத்தை உதற முடியாது என்றால் அக்கறையுள்ள அண்ணனாக இருந்து உனது நல்வாழ்வைத் தொடங்கி வைத்த பிறகு என் விஷயத்தில் அக்கறை கொள்வேன். ஆகையால் நீ நன்றாக யோசித்து முடிவுக்கு வரலாம். உன் முடிவு எதுவாக இருந்தாலும் நான் ஏற்றுக் கொள்வேன். ஆகையால் அதைரியப்படாமல் சிந்தித்து முடிவுக்கு வா'' என்றார் கனிவோடு.

எனது மன வேதனை அடங்க இரண்டு நாட்களாயின. ''எனது லட்சியத்தைக் கைவிடாமலே தங்கள் கிரஹலக்ஷ்மியாகவும் சேவை செய்ய என்னால் முடியும் என்று உங்களுடன் வாதாடி வெற்றி கொள்ளத்தான் விழைந்தது மனம். ஆனாலும் எந்த விதத் தர்க்கமும் இன்றி உங்கள் விருப்பத்தை ஏற்பதே சிறந்தது என்று எனது அறிவு உணர்த்தியதால்








உத்தமமான குணங்கள் பல கொண்ட திருமணவாள நாயுடு கல்கி மிஷின் ஃபோர்மன் பதவியிலிருந்து அண்மையில் ஓய்வு பெற்றார். அச்சு இயந்திரங்களைப் பற்றிய அநுபவ பூர்வமானதும் நுணுக்கமானதுமான ஞானம் உடைய இவர், கல்கியின் ஆரம்ப நாட்களிலிருந்து முப்பத்தோராண்டுகளுக்கு மேலாக இந்த ஸ்தாபனத்துக்கு உழைத்து வந்துள்ளார். அவருக்கு 'கல்கி' காரியாலயத்தைச் சேர்ந்த அன்பர்கள் பிரிவுபசார விருந்து நடத்தி ரூ. 1501/- பணமுடிப்பும் அளித்தனர்.

அதையே இன்று உங்களுக்கு அறிவித்தேன்'' என்றேன், பெண் என்ற பெருமிதத்தோடு.

அறிவொளி வீசும் அவரது விழிகள் விரிந்தன. அழகாக, அமைதியாக ஆடம்பரம் ஏதுமின்றி எங்கள் திருமணம் திருநீர்மலை நீர்வண்ணப் பெருமாள் இருப்பிடத்தில் நடந்தது. அம்மாவின் பழைய புன்னகையும் மீண்டது.

நிம்மதியான ஆனந்தத்தில் லயித்திருந்தவளை அமுதமன்ன கணவரின் குரல் எழுப்பியது: ''கோகில்! நமது திருமண நாளின் நினைவுப் பரிசாக நான் வாங்கியுள்ள இந்த 'ஆபரணத்தை' கழுத்தில் பூட்டட்டுமா?''

''ஆபரணம்!'' அந்தச் சொல் என் நினைவை உலுக்கியது. திடுக்கிட்டுத் திகைத்துநின்றேன்.

பெட்டியைத் திறந்து அவ்வாபரணத்தை எடுத்து என் கழுத்திலும் பூட்டினார். உடல் சிலிர்க்க, உள்ளம் விம்ம அவரை நோக்கினேன். கண்களில் கனிவும், அன்பும் துள்ள நின்ற அவர் சொன்னார்:

''கோகிலா! 'நாட்டுப் பணியில் டாக்டராகவும் வீட்டுப் பணியில் திருலக்ஷ்மியாகவும் இருந்து வாழ்வைப் பொன் வாழ்வாக ஆக்கிக்கொள்ள என்னால் முடியும்!' என்று நீ சொல்லாமல் சொன்ன சொல்லில் அன்றே எனக்கு நம்பிக்கை விழுந்துவிட்டது. ஆகையால் இனி நீ மருத்துவப் படிப்பைத் தொடரலாம்'' என்றவர், பாம்பாகத் துவளும் குழல் ஆபரணத்துடன் நிற்கும் என்னை விழி கொள்ளா ஆர்வத்துடன் பார்த்தார்.

## முதிர்ந்த பழம் உதிர்ந்தது!



சைவ சமயப் பெரியார் திரு சச்சிதானந்தம் பிள்ளை அவர்களின் மறைவு தமிழ் நாட்டு ஆஸ்திக உலகுக்குப் பெரு நஷ்டமாகும். அரசாங்கக் கல்வித் துறையில் உயர் அதிகாரியாகவும் பின்னர் அண்ணாமலை சர்வகலாசாலையில் ரிஜிஸ்திராராகவும் பணியாற்றினார். 'எத்தைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும் முத்தர் மனமிருக்கும் மோனத்தே' என்பது போல் அவர் எந்தப் பதவி வகித்தாலும் அவரது சிந்தனை முழுவதும் நாஸ்திக வாதத்தை எதிர்த்து, பிற சமய மோகத்தில் ஹிந்துக்கள் விழுவதைத் தடுக்கும் வகையில் ஆஸ்திகப் பிரசாரம் புரிவதிலேயே இருந்து வந்தது. உத்தியோக வாழ்விலிருந்து ஓய்வு பெற்ற பின் முழு நேரமும் சமயப் பிரசாரப் பணியிலேயே ஈடுபட்டு வந்தார். திரு. வி. க., ஞானியார் சுவாமிகள், பாம்பன் சுவாமிகள், திருப்புகழ் மணி கிருஷ்ணஸ்வாமி ஐயர், மகரிஷி வாசுதேவாச்சாரியார், இப்படிப் பல பெரியவர்களுடன் தொடர்பு கொண்டு அரும்பணி ஆற்றி வந்தார். சிவப் பழமாகத் திகழ்ந்த பிள்ளை அவர்கள் எண்பத்து நாலாவது வயதில் இறைவனடி சேர்ந்தார்கள். அவரது குடும்பத்தாருக்கு நமது அநுதாபங்கள்.



## 'ஹிந்து' குடும்பத்தில் ஒரு துயரம்

ஹிந்து பத்திரிகையின் ஆசிரியராகவும் அதிபராகவும் திகழ்ந்த காலஞ்சென்ற கஸ்தூரி சீனிவாசன் அவர்கள் மனைவியார் ஸ்ரீமதி கோமளம் சீனிவாசன் அவர்கள் சென்ற திங்கட்கிழமை (10–7–72) காலை தமது 75வது பிராயத்தில் வைகுந்தத்தை அலங்கரிக்கச் சென்றுவிட்டார்கள். தாம் கரம் பிடித்த கணவருக்கு வாழ்க்கையில் உறுதுணையாக விளங்கினார்கள். திரு சீனிவாசன் தொழில் நிமித்தம் மேல்நாடுகளுக்குச் சென்றபோது கோமளம் அம்மாளும் உடன் சென்றிருக்கிறார்கள். அவரது மகன் திரு எஸ். ரங்கராஜன் அவர்களுக்கும் 'ஹிந்து' குடும்பத்தினருக்கும் நமது ஆழ்ந்த அநுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

## நல்ல பண்பாளர் மறைவு

சென்னை ஆயுள் இன்ஷூரன்ஸ் கார்ப்பொரேஷனின் டெபுடி ஜோனல் மானேஜர் திரு எம். ஷண்முகம், தமது 49-வது வயதில் காலமானார் என்ற செய்தி யாரையும் துணுக்குறச் செய்யும். அவருடைய உயர்ந்த பண்பும், இனிய முகமும் யாரையும் கவரக்கூடியவையாகும். சென்னையில் சங்கீதம், நாடகம், நடனம் ஆகிய எந்த லலித கலை நிகழ்ச்சி நடந்தாலும், அது தரமிக்கதாய் இருந்தால் அங்கு நிச்சயம் திரு எம். ஷண்முகம் இருப்பார். கலைஞர்களை ஊக்கி உற்சாகப் படுத்துவார். ஒரு நல்ல பண்பாளரின் மறைவு கலா ரசிக உலகத்துக்கு ஈடுசெய்ய முடியாத நஷ்டமாகும். அவருடைய குடும்பத்தாருக்கு அநுதாபங்கள்.



# தரமிக்க துணிகள் எவை?



# டுவின் டஸ்கர்

டிரில் • பாப்லின் • காபர்டைன் • டஸூர்
முதலியன



**மதுரை மில்ஸ்** மதுரை, தென் இந்தியா.

Bensons 2155-TAM

---







# அமிர்தாஞ்சனம்

## விரைவில் குணமளிக்கிறது!

அமிர்தாஞ்சனம் தலைவலி, ஜலதோஷம், சுளுக்கு, தசைவலி இவற்றிலிருந்து விரைவில் குணமளிக்கிறது. உபாதை ஏற்பட்டுள்ள இடத்தில் சிறிதளவு அமிர்தாஞ்சனம் தடவி துரித நிவாரணம் பெறுங்கள். 75 வருடங்களாக குடும்பங்களில் பயன்பட்டு வரும் நம்பகமான நிவாரணி அமிர்தாஞ்சனம். எப்போதும் ஒரு பாட்டில் கைவசம் இருக்கட்டும். சிக்கனமான ஜாடிகளிலும், கைக்கு அடக்கமான டப்பாக்களிலும் கிடைக்கிறது.

10 மருந்து பொருள்கள் ஒருங்கே சேர்ந்த அமிர்தாஞ்சனம் வலிகளுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற நிவாரணி

அமிர்தாஞ்சன் லிமிடெட்　　AM-598

# உங்கள் குடும்பத்திலுள்ள ஒவ்வொருவருக்கும் நோவா ஸ்தாபனத்தாரின் பரிசுகள்




உங்கள் குடும்பத்தின் அழகு பராமரிப்பை நோவா முறையிலேயே பாதுகாத்துக் கொள்ளுங்கள்

தயாரிப்பாளர்கள் :

## நோவா கம்பெனி

லால்பகதூர் சாஸ்திரி மார்க்
பாண்டுப், பம்பாய் -78

# வியக்கத்தக்க விதிமுறை அறுவை சிகிச்சை இன்றியே மூலத்தைச் சுருக்க உதவுகிறது

## நமைச்சலை நிறுத்துகிறது - நிமிடங்களில் வலியைப் போக்குகிறது

நியூ யார்க் - இப்பொழுது விஞ்ஞானத் துறை, முற்றிவிட்ட மூலநோய் கண்டவர்களைத் தவிர மற்றவர்களின் மூலத்தை அறுவை சிகிச்சை இன்றியே சுருக்கும் ஓர் அற்புதமான மருந்தைக் கண்டுபிடித்துள்ளது. இம் மருந்தால், மூலநோய் கண்டிருந்த கணக்கற்றவர்களுக்கு 'கருத்தைக் கவரும் அபிவிருத்தி' ஏற்பட்டிருப்பதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது. டாக்டர்களின் பரிசோதனைகளும் உறுதி கூறியுள்ளன. மூலநோயால் ஏற்படும் வலியும் நமைச்சலும் அதி விரைவில் நீங்கி மூலம் சுருங்கிக் குணமளித்திருக்கிறது. இதன் விளைவுகள் வியக்கும்படி உள்ளன. இந்த நோயால் 10, 20 ஆண்டுகளாக அவதிப்பட்டு வருவோர்கூட "இப்போது மூலநோய் ஒரு பிரச்னையே இல்லை" என்று கூறுகிறார்கள். இந்த சிகிச்சை, மயக்க மருந்து, உணர்விழப்பு மருந்து, மற்றும் சுருங்கச் செய்யும் மருந்துகளைப் பயன்படுத்தாமலேயே வெற்றி தந்துள்ளது. மூலத்தைக் குணப்படுத்தும் இந்தப் புதிய மருந்தின் பெயர் பிரிபரேஷன் எச் ஆயின்ட்மென்ட். மூலத்தைச் சுருக்குவதோடு, பிரிபரேஷன் எச் ஆயின்ட்மென்ட் நமைச்சலை நீக்கி, வலி தணிந்து குடல் இயங்க உதவுகிறது.

உங்கள் மருந்து வியாபாரியை பிரிபரேஷன் எச் பற்றிக் கேளுங்கள். (மருந்து இடும் குழாயுடன்) 30 கிராம் மற்றும் 50 கிராம் கொண்ட 'ட்யூபுகளில் கிடைக்கிறது.

* ரெஜிஸ்டர்டு ட்ரேட்மார்க்

ரெஜிஸ்டர்டு யூஸர்ஸ், ஜெப்ரி மேனர்ஸ் அன்டு கம்பெனி லிமிடெட், பம்பாய் -1.

74 PH 82 TAM

# பெண் பெண்தான்!

மயிலை மூர்த்தி

அட்டைப் படக் கதை

**“ம**ங்களம்! மங்களம்!” காலையில் வந்த அன்றைய பேப்பருடன் மனைவியை அழைத்தவாறே, சமையலறையை அடுத்த ஹாலுக்குள் நுழைந்தார் சங்கரன். “இதோ பார் இன்று பத்திரிகையில் விளம்பரம் ஒன்று வந்திருக்கிறது. பையன் நல்ல வேலையில் இருக்கிறான். ஒரே பிள்ளை. கூடப் பிறந்தவர்கள் ஒருவரும் இல்லை. ஜாதகம் பார்க்கத் தேவையில்லை. பெண் பிடித்திருந்தால் மட்டும் போதுமாம். வயதுகூடப் பொருத்தமாயிருக்கிறது. ஏய், என்ன சொல்றே? நம் தாரிணிக்குப் பார்க்கலாம்னு இருக்கேன்.”

“உம், உங்களுக்குத் திருப்தியாக இருந்தால் பாருங்கள். நாமும்தான் எவ்வளவோ வருஷங்களாகத் தேடாத இடம் பாக்கியில்லை. எப்படியாவது இந்தத் தையிலாவது அவளுக்குக் கல்யாணம் நிச்சயமானால் சரி”— மங்களம் திரும்பிவிட்டாள்.

**ச**ங்கீத வித்வான் சங்கரனுக்கு வருமானத்துக்கு ஒரு வரம்பு இருந்தாலும், குழந்தைகள் மீது இருந்த பாசத்துக்கு எல்லை இல்லாததால் தாரிணி கல்லூரிப் படிப்பை முடித்திருந்தாள். அடுத்தவள் கமலியும், பையன் சீனுவும் பள்ளியின் வெவ்வேறு படிவங்களில் இருந்தனர். படித்த பெண் வேலைக்குப் போக வேண்டும், சம்பாதிக்க வேண்டும், குடும்பத்துக்கு உதவ வேண்டும் — இதெல்லாம் அவரைப் பொறுத்தவரை ஒரு பாவச் செயல். என்ன செய்வது? படிப்பை முடித்துவிட்டு, சம்பிரதாயப்படி குருகுலவாசம் செய்து பெரியவர்களுக்குப் பணிவிடை செய்து, அவர்கள் ஆசியுடன் சங்கீதம் பயின்றவர் அவர்.

‘வேளை, வேளை’ என்பார்களே, அது அடித்து மோதிக் கொண்டு வந்து, எங்கோ இருந்த சேகரை மாப்பிள்ளை ஸ்தானத்தில் அங்கு கொண்டுவந்து நிறுத்தியது. பையனைப் பார்த்ததும் எல்லோருக்கும் ஒரு மனநிறைவு. சேகருடைய பேச்சு வார்த்தைகள், பழக்க வழக்கங்கள், நடை, உடை பாவனைகள் எல்லாமே சங்கரன் குடும்பத்தாரைக் கவர்ந்துவிட்டன சிறிது நேரத்தில். தாரிணியின் மனத்தில்கூட இனம் புரியாத ஒரு நிம்மதி. சேகருடைய நண்பர்கள் என்று நான்கு பேர்கள் மட்டும் வந்திருந்தனர். ஒப்பந்தப்படி சில ஆயிரம் ரூபாய்களை ரொக்கமாகவே கொடுத்து விட்டதால், தாரிணியின் திருமணம் எளிய முறையில் நடந்தேறியது. மாப்பிள்ளையின் நண்பர்கள் சங்கரனைப் பார்த்து, “சார், நீங்கள் கொடுத்துவைத்தவர்கள். உங்கள் மாப்பிள்ளைக்கு இருக்கும் திறமைக்கு இன்னும் பெரிய பதவிகள் எல்லாம் காத்திருக்கின்றன. உங்கள் பெண் அதிர்ஷ்டசாலி சார்!” என்று ஒரே குரலில் புகழ்ந்தபோது அவர் மகிழ்ச்சியின் எல்லைக்கே போய்விட்டார். பெண்ணைப் பெற்றவருக்கு இதைவிட நிம்மதியளிக்கும் விஷயம் வேறு என்ன இருக்க முடியும்?

ஒன்பதுக்கு ஒன்பது அளவில் இரண்டு அறைகள். பாலிகஞ்ச் பகுதியில் அந்த இடம் கிடைத்ததே அதிர்ஷ்டம்தான். பக்கத்து அறையில் தமிழ்நாட்டைச் சேர்ந்த பெரியவர் ஒருவர் இருந்தார். ஒண்டிக் கட்டை. வீட்டுக்கார அம்மாள் ஒரு வங்காளி, மாடியிலேயே இருந்தாள்.

அன்று கல்கத்தாவில் ஏதோ ஒரு ‘பந்த்’. போக்குவரத்து எல்லாம் தடைப்பட்டுப் போயின. பிற்பகலிலேயே வீடு திரும்பிய சேகர், உள்ளே நுழையும்போதே “தாரிணி, சீக்கிரம் சாப்பாட்டைத் தயார் பண்ணு. என்னுடைய துணி மணிகளை யெல்லாம் சூட்கேஸில் எடுத்து வை. இரவு வண்டிக்கே கிளம்ப வேண்டும்” என்றான்.

தாரிணி அவனையே உற்று நோக்கினாள்.

“ஒரே வாரம்தான். அலுவலக விஷயமாக விசாகப்பட்டினம் போய் வரும்படி மானேஜர் கூறிவிட்டார். போன காரியம் முடிந்ததும் ஒரே வாரத்தில் ஓடியே வந்து விடுகிறேன்” என்றவன், செல்லமாக அவள் கன்னத்தில் தட்டினான். ஒரு வாரம் தனிமை; இதுவரை அவள் அனுபவிக்காத ஒரு நிலை. அவள் உடல் முழுதும் வியர்த்தது.




டாக்ஸியில் ஏறிக்கொண்ட சேகர், “டாடா, குட்நைட்” என்று கூறியபடி கை அசைத்தான். டாக்ஸி கிளம்பிவிட்டது.

**அ**ன்றுதான் அவள் கணவன் வெளியிலிருந்து திரும்ப வேண்டிய நாள். விடியற்காலையிலேயே எழுந்து குளித்துவிட்டு, வெள்ளை நிற வாயில் சேலை ஒன்றை உடுத்தி, தன் கணவன் வருகையை ஆவலுடன் எதிர்

நோக்கி, வழிமேல் விழி வைத்துக் காத்திருந்தாள் தாரிணி. காப்பி தயாராக இருந்தது. கூடவே சாப்பாடும் தயாராகிக் கொண்டிருந்தது. சேகருக்கு மிகவும் பிடித்தமான தக்காளி ரசத்தின் வாசனை மூக்கைத் துளைத்தது. கடிகாரத்தின் முட்கள் மெதுவாக நகர்ந்து கொண்டிருந்தன.

தாரிணியின் பொறுமையைச் சோதித்து வந்த கடிகாரம் பத்துத் தடவைகள் அடித்து விட்டு ஓய்ந்தது. காப்பியை பக்கத்து வீட்டுப் பெரியவருக்குக் கொடுத்தாகி விட்டது. சாப்பாடும் ஆறிக் கொண்டே வந்தது. கண்ணாடி முன் சென்று தன் முகத்தை ஒரு முறை பார்த்துக் கொண்டாள் தாரிணி. அலங்காரத்தில் அன்று அவள் அளவுக்கு மீறிக் கவனம் செலுத்தியிருந்தாள்.

பக்கத்துப் போர்ஷன் பெரியவரிடம் சென்று, ''தாத்தா, உங்களுக்குத் தொந்தரவு கொடுக்கிறேன்'' என்று பீடிகையுடன் ஆரம்பித்தாள்.

''என்னம்மா தொந்தரவு?''

''தாத்தா! அவர் இன்னும் வரவில்லை. போன இடத்தில் வேலை முடிந்ததோ என்னவோ? என்றைக்கு வருகிறாரோ தெரியவில்லை. கம்பெனி விலாசம் இருக்கு. டெலிபோனில் கூப்பிட்டு விசாரிக்க முடியுமா?''— தான் எதிர்பார்த்து எடுத்து வந்திருந்த கம்பெனி விலாசம் எழுதி வைத்திருந்த காகிதத்தை அவரிடம் நீட்டினாள். கிழவர் அந்தச் சீட்டை வாங்கிக் கொண்டு, தாம் வழக்கமாகச் சாப்பிடும் ஹோட்டலுக்குச் சென்றார். அங்கிருந்த டெலிபோன் டைரக்டரியில் கம்பெனியின் நம்பரைக் கண்டு பிடித்து அந்த நம்பருக்குப் போன் செய்தார். ஆபரேட்டரின் குரல் கேட்டதும் ''மிஸ்டர் சேகர்'' என்றார். 'க்ளிக்' சத்தத்தைத் தொடர்ந்து ''யெஸ். சேகர் ஹியர்'' என்ற குரல் கேட்டது.

''நான்தான் ராமாமிருதம். பாலிகஞ்சிலிருந்து பேசறேன். உங்கள் போர்ஷனுக்குப் பக்கத்துப் போர்ஷன்...''

''வாட்? ப்ளீஸ் ரிபீட். சேகர் ஹியர். உங்களுக்கு யார் வேணும்?''

''சார், உங்கள் மனைவி தாரிணி, நீங்க போன இடத்தில் வேலை முடிந்து ஊருக்குத் திரும்பியாச்சான்னு கேட்கச் சொன்னாள்.''

அகோரச் சிரிப்பொலியைத் தொடர்ந்து மறுபடியும் குரல் கேட்டது மறு முனையிலிருந்து.

''ரொம்ப ஆச்சரியச் செய்தியாயிருக்கே! சார், எனக்குக் கல்யாணமே ஆகலே.'' மறுபடியும் சிரிப்பு. ''ஸாரி ராங் நம்பர்.''

''ஸார், ஸார், போனை வைச்சுடாதீங்க. உங்கள் டெலிபோன் நம்பர் 886750தானே? உங்க பெயர் சேகர்தானே?''

'' ஆமாம்! நீங்க சொல்றதெல்லாம் ரொம்பச் சரி.''

''அப்போ, உங்க மனைவி தாரிணி...''

''சார், சார், என்ன சார் நீங்க. மறுபடியும் சொல்றேன். எனக்குத் திருமணமே ஆகவில்லை சார். தேவையிருந்தால் நீங்களே நேரில் வாருங்கள்.''

ஹோட்டலைவிட்டு வெளியே வந்த ராமாமிருதம் சிந்தனையில் ஆழ்ந்தார். அவருக்கு ஒரே குழப்பம். சட்டென்று ஒரு தீர்மானத்துக்கு வந்தவர், அப்பொழுதுதான் வந்து நின்ற டிராம் வண்டியில் ஏறினார். எஸ்பிளனேட் பகுதியில் அந்தக் கம்பெனியைக் கண்டுபிடிப்பதில் எந்த விதச் சிரமமும் ஏற்படவில்லை அவருக்கு.

லிப்டில் ஏறியவர் இரண்டாவது மாடிக்கு வந்துவிட்டார். கம்பெனியின் பெயர்ப் பலகை பெரிதாகக் காணப்பட்டது. எதிரே தென்பட்ட வங்காளி ஒருவரிடம் ''மிஸ்டர் சேகர்'' என்றார். அவர் ராமாமிருதத்தை ஒரு கண்ணாடி அறையின் முன்னால் கொண்டு போய் விட்டார். அறைக் கதவு திறக்க, ராமாமிருதம் உள்ளே நுழைந்தார்.

உள்ளே நடுநாயகமாக அமர்ந்திருந்த நபரைப் பார்த்ததும் ராமாமிருதத்துக்குத் தூக்கி வாரிப் போட்டது. அங்கேயிருந்த நபர் தாரிணியின் கணவன் அல்ல.

''சற்று முன் டெலிபோன் செய்தீர்களே. நான்தான் சேகர். இந்தக் கம்பெனியின் கணக்கு அதிகாரி.'' — எழுந்தவன் கைநீட்டி அவரை வரவேற்று, ''உட்காருங்கள்'' என்றான்.

ராமாமிருதம் உட்காரவில்லை.

''என்ன சார் விஷயம்? உங்களுக்கு யார் இந்த நம்பரைக் கொடுத்தார்கள்? மனைவி என்று ஏதேதோ கூறினீர்கள். என்ன விஷயம்?'' என்றான் அந்த இளைஞன்.

ராமாமிருதத்தின் கண் முன்னால் உலகமே சுழன்றது. அந்த அறை, இளைஞன், அருகிலிருந்த காட்ரேஜ் பீரோ, மேஜை மீது இருந்த டெலிபோன் எல்லாம் ஒரு வட்ட வடிவத்தில் சுழல ஆரம்பித்து விட்டன.

'' சார்! உங்களுக்குத் தொந்தரவு கொடுத்து விட்டேன். தவறான விலாசத்துக்கு வந்துவிட்டேன். நான் வருகிறேன்'' என்று கூறி அறையை விட்டு வெளியேறிய ராமாமிருதத்தை அந்த இளைஞன் வியப்புடன் பார்த்துக் கொண்டேயிருந்தான்.

அடுத்த நிமிஷம் முதல் தான் என்னென்ன செய்ய வேண்டும் என்ற சிந்தனையில் ஆழ்ந்த ராமாமிருதம் வெளியே ஊர்ந்துகொண்டிருந்த டிராம் வண்டியில் ஏறி வீட்டுக்குத் திரும்பினார். தாரிணியிடம் என்ன சொல்வது, எப்படிச் சொல்வது என்று தயங்கிய நிலையில் அவர் வீட்டுக்குள் அடியெடுத்து வைப்பதற்கும், எதிர் வீட்டுப் பெரியவர் அவரை அழைப்பதற்கும் சரியாக இருந்தது.

''வாங்க சார், உள்ளே வந்துவிட்டுப் போகலாம்'' என்றார் பெரியவர். தொடர்ந்து, ''பக்கத்துப் போர்ஷன் புதுக் குடித்தனத் தம்பதிகள் எப்படி இருக்கிறார்கள்? அந்தப் பெண்ணைப் பார்த்தால் மகாலக்ஷ்மி மாதிரி நல்ல களையாக இருக்கிறது. பாவம், எந்த ஊர்ப் பெண்ணோ?...'' என்றவர், ''சொல்லவே சங்கடமாயிருக்கு. அவன் ஓர் அயோக்கியன் சார். அவனுக்கு இதுதான் தொழில்'' என்று முடித்தார்.

''சார், என்ன சொல்றீங்க?''

''உங்கள் பக்கத்துப் போர்ஷனுக்குச் சுமார் இரண்டு மாதங்களுக்கு முன் அவன் குடி வந்தபோது என் பையன் அவனைப் பார்த்து விட்டு, அப்போதே எச்சரிக்கை செய்தான். அவன் சொன்னது போல் அவன் அடுத்த மாதமே ஒரு பெண்ணுடன் வந்து இறங்கி

ளுன். அவனைச் சேர்ந்த ஒரு கோஷ்டியே இருக்கிறது. அவர்களுக்கு இதுதான் தொழில். பத்திரிகையில் விளம்பரம் கொடுப்பது; பெண்ணுக்குத் திருமணம் ஆனால் போதும் என்ற நிலையில் உள்ள பெற்றோரிடம், எல்லாவற்றையும் ரொக்கமாக வாங்கிக் கொண்டு, எளிய முறையில் ரகசியமாகத் திருமணம் செய்துகொண்டு, அந்தப் பெண்களை இப்படிக் கண்காணாத தொலையில் உள்ள பம்பாய், கல்கத்தா போன்ற நகரங்களுக்கு அழைத்து வந்து, கையிலுள்ள பணத்தில் இரண்டொரு மாதங்கள் அந்தப் பெண்களுடன் குடும்பம் நடத்திவிட்டு ஓடி விடுவது. இவன்கூட இந்தப் பெண்ணை விட்டு விட்டுப் போய்விடுவான் பாருங்கள். இந்தக் கோஷ்டியில் தகராறு வந்ததில் ஒருவன் விலகி வெளியே வந்துவிட்டான். அவன் என் பையனுக்குத் தெரிந்தவன். அவன் எல்லாவற்றையும் விளக்கமாகக் கூறி, இனிமேல் இந்த அயோக்கியர்களுடன் சேருவதில்லை என்று சத்தியம் செய்து கொடுத்துவிட்டுப் போய்விட்டான்.'' பெரியவர் பேசி முடித்தார். ராமாமிருதத்தின் முகத்தில் வியர்வை வழிந்தது.

''சார், நீங்கள் சொல்வதைப் பார்த்தால் ...அவன் புறப்பட்டுப் போய் ஒரு வாரம் ஆகிறது சார். இன்றைக்குத் திரும்ப வேண்டும். அங்கே பாவம், அந்தப் பெண் நம்பிக்கையோடு அவனுக்காக வழிமேல் விழிவைத்துக் காத்துக் கிடக்கிறாள்.''

''அவன் இனிமேல் வரமாட்டான் பாருங்கள். சீக்கிரமாகப் போய் அந்தப் பெண்ணிடம் போலீஸில் புகார் செய்யச் சொல்லுங்கள். கூடவே அவளுடைய தகப்பனுருக்கு நீங்கள் தந்தி கொடுத்து விடுங்கள். பாவம், நல்ல பெண் சார். இது போன்ற ஊர்களில் அவளைத் தனியே விட்டு வைக்க மாட்டார்கள். சீக்கிரம் கிளம்புங்கள் சார்!''

''சார், என்னுலேயே இந்த அதிர்ச்சியைத் தாங்க முடியவில்லையே, எப்படி சார் அவளிடம் சொல்லப் போகிறேன்?'' — தள்ளாடியவாறே எழுந்த ராமாமிருதம், படிகளில் இறங்கி, சாலையைக் கடந்து, தம் வீட்டை அடைந்தார். அறைக் கதவைத் திறந்து உள்ளே நுழைந்ததும், மின் விசிறியைச் சுழலவிட்டு, நாற்காலி ஒன்றை இழுத்துப் போட்டு அதில் அமர்ந்தார்.

''பேசினீர்களா, தாத்தா? அவர் வந்து விட்டாரா?'' — தாரிணி, அவர் அறைக்குள் நுழைந்தவள், ஆவலே உருவாக அவர் முகத்தையே பார்த்தாள்.

''பேசினேன் அம்மா. அவர் வருவதற்கு இன்னும் ஒரு வாரம் ஆகும் என்று கம்பெனியில் சொன்னார்கள்.'' ராமாமிருதம் எங்கோ பார்த்தவாறே பேசினார்.

''இன்னும் ஒரு வாரமா?''

அவர் கெடு வைத்த ஏழு நாட்களும் வேகமாக ஓடிவிட்டன.

அன்று காலை; அறையிலே அமர்ந்து சிந்தனையில் ஆழ்ந்திருந்தார் ராமாமிருதம்.

வாசலில் நிழலாடியது. தாரிணிதான் உள்ளே வந்து கொண்டிருந்தாள். ராமாமிருதத்தின் முகத்தை உற்று நோக்கியவள்,



''ஏன் தாத்தா, ஒரு மாதிரி இருக்கிறீர்கள்? உடம்புக்கு என்ன?'' என்று கேட்டாள்.

''ஐயோ குழந்தை! உலகமே அறியாத உன்னிடம் இந்தப் பயங்கர உண்மையை எப்படியம்மா சொல்லப் போகிறேன்?'' — பார்வையைக் கண்ணீர் மறைக்க எங்கோ பார்த்துக்கொண்டு, ''அம்மா, குழந்தை! ஒரு வாரமாக என் மனமே உறைந்து போய் விட்டதம்மா! மகாலக்ஷ்மி மாதிரியுள்ள உன்னை வஞ்சித்து, மோசம் செய்து ஓடியவனை நான் விடப் போவதில்லை. உடல் தளர்ந்து விட்டாலும் உள்ளத்திலே உரம் இருக்கு. எதற்கும் கவலைப்படாதேம்மா. உன் கணவருடைய புகைப்படம் இருந்தால் கொடு. இன்றே பத்திரிகையில் விளம்பரம் கொடுத்துக் கையும் களவுமாகப் பிடித்து விடலாம். உன் தகப்பனுருக்கும் தந்தி கொடுத்து வரவழைக்கிறேன்'' என்ருர்.

போட்டோவைப் பற்றிய பேச்சு வந்ததும் அவள் நினைவு எங்கோ சென்றது. திருமணத்தின்போது அவளுடைய தகப்பனுர் எப்படியாவது போட்டோ ஒன்று எடுத்துவிட வேண்டும் என்று துடியாய்த் துடித்தார். சந்தர்ப்பமே கிடைக்கவில்லை. அவளோகூடத் தன் கணவரிடம் கூறியபோது, ''இப்போது நேரமில்லை. நம் ஊரில் இல்லாத ஸ்டூடியோக்களா? ஊருக்குப் போனவுடன் கவர்ப் படம் ஒன்று எடுத்து, இவர்களுக்கு அனுப்பி விட்டால் போகிறது'' என்று அன்று அவர் கூறிய வார்த்தைகளுக்குப் பொருளை உணர்ந்தாள் அவள். தவறு புரிய ஆரம்பித்தது. ஆனல் தவறு செய்தவரைக் காட்டிக் கொடுக்க மனம் இடம் கொடுக்கவில்லை.

''பெரியவர்கள் முன்னிலையில் வேதப் பிரமாணத்தோடு, அக்னி சாட்சியாக என்னை ஏற்றுக் கொண்டவர் அவர். அவரைத் தேட, என் அவல நிலையை விளம்பரப்படுத்தி, போலீஸில் புகார் செய்வதன் மூலம், எனக்கோ, உங்களுக்கோ, அல்லது என் பெற்றோர்களுக்கோ புகழ் சேர்ப்பதாக நினைக்கிறீர்களா தாத்தா?'' — மேற்கொண்டு வார்த்தைகளை முடிக்க முடியாமல் திணறினாள் தாரிணி.

''சரியம்மா, நான் சற்றும் எதிர்பாராத வகையில் உன் முடிவை, போக்கைத் திட்டவட்டமாக அறிவித்து விட்டாய். பெண்களுக்கே உரித்தான இயல்பு அம்மா அது. ஆண்கள் குழம்பித் தவிக்கும் விஷயங்களை, பிரச்னைகளையெல்லாம், பன்மடங்கு திடசித்தத்தோடு ஏற்று, சமாளித்து விடுவார்கள் பெண்கள். இங்கே எனக்குத் தெரிந்த குழந்தைகள் பள்ளி ஒன்றில் ஆசிரியை வேலை ஒன்று காலியாக உள்ளது. நீ விரும்பினால் அதை உனக்கு வாங்கித் தருகிறேன்'' என்றார்.

அன்று இரவு: லாட்ஜில் சாப்பாட்டை முடித்துக் கொண்டு தம் அறைக்குத் திரும்பிய ராமாமிருதம் பக்கத்து அறையில் கைக் குழந்தை ஒன்றின் அலறல் ஒலி கேட்டு அப்படியே நின்றுவிட்டார். தொடர்ந்து தாரிணியின் குரல் கேட்டது. குழந்தையைச் சமாதானப்படுத்திக் கொண்டிருந்தாள் அவள்.

''என்ன தாத்தா அப்படிப் பார்க்கிறீர்கள்? இவன்தான் இனிமேல் எனக்குத் துணையாக என்னுடனேயே இருக்கப் போகிறான்'' என்றவள் குழந்தையை ஒரு முறை முத்தம் இட்டு, '' ஏண்டா, ராஜா, அப்படித்தானே ?'' என்றாள்.

''என்னுடன் வேலை செய்து வந்த ஒரு துர்ப்பாக்கியசாலிப் பெண். என்ன செய்வது, சொந்த சகோதரிக்கும் மேலாகப் பழகிவிட்டாள் ! காலப் போக்கில் தெரிந்தது, அவள் ஒரு குழந்தைக்குத் தாயாகப் போகிறாள் என்ற உண்மை.

'' ஒரு நாள்; வகுப்பறையில் மயங்கி விழுந்து விட்டாள். பிரசவ வேதனை ஏற்பட்டு விட்டது. அருகிலிருந்த என் கைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டவள், ' தாரிணி! எனக்கு என்னமோ பயமாக இருக்கு. உன்னிடம் ஒன்று கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். அப்படி எனக்கு ஏதாவது ஏற்பட்டு விட்டால் பிறக்கப் போகும் என் குழந்தைக்கு நீதான் தாய், தந்தை எல்லாமாக இருந்து காப்பாற்ற வேண்டும். நீ என் கூடப் பிறவாத சகோதரி. மேற்கொண்டு என்னை எதுவும் கேட்காதே. இந்த உதவியைச் செய்வாயா, தாரிணி?' என்று என் கைகளைப் பிடித்துக் கொண்டாள். அவள் கண்கள், அவள் கூற விரும்பாத எவ்வளவோ விஷயங்களை உணர்த்தின.''

ராமாமிருதத்துக்கு என்ன பேசுவது என்றே புரியவில்லை.

''உன்னுடைய பொறுப்புகள் அதிகமாகின்றன அம்மா! பார்த்துக் கொள். மற்றபடி, அறிவாளியான உனக்கு நான் என்ன சொல்லப் போகிறேன். ஆனால் ஒன்று மட்டும் கூறுகிறேன் தாரிணி, உன்னை என்னால் இன்னமும் புரிந்து கொள்ளவே முடியவில்லை. நன்றாக யோசித்துப் பார்! கடந்த சுமார் ஒரு வருஷமாக நடத்தும் தனி வாழ்க்கையில் பல நிலைகளைக் கடந்து வந்திருக்கிறாய்.''

'' தாத்தா, கல்யாணியிடம் வாக்குக் கொடுத்துவிட்டேன். ஒரு பெண்ணின் மனத்தை மற்றொரு பெண்தான் புரிந்து கொள்ள முடியும். என்னை இந்த நிலைக்கு ஆளாக்கிய அந்தப் பொல்லாத விதி, அவள் வாழ்விலும் புகுந்து, சதி செய்து கடைசியில் குழந்தையிடமிருந்து தாயைப் பிரித்துவிட்டது. இனி இந்தக் கண்ணன் என் குழந்தை. மாறுபட்டு வரும் என் சூழ்நிலைக்கு ஏற்ப இந்தக் குழந்தையும் கடவுளாகக் கொடுத்தது என்றுதான் ஏற்றுக் கொண்டுவிட்டேன். நன்கு யோசித்துப் பாருங்கள் தாத்தா. ஒரு பெண் தனியாக வாழ்ந்தாலே சந்தேகக் கண் கொண்டு பார்க்கும் இந்தச் சமுதாயம் அதுவும் என் போன்றவர்களை விட்டு வைக்கவா போகிறது? தெரிந்தோ, தெரியாமலோ எனக்கு ஏற்படும் தொந்தரவுகளுக்கும், அபவாதங்களுக்கும் விடைதான் இந்தக்குழந்தை. இது திருமண வாழ்வின் நிறைவைக் குறிக்கும் நிலை. என்போன்ற அபலைகளுக்கு நிம்மதியை அளிக்கும் நிலை. இந்தக் குழந்தைக்கு நான் பாதுகாப்பு; அதே சமயத்தில் இந்தக் குழந்தை எனக்குப் பாதுகாப்பு ! வியப்பாக இல்லை ?''

''தாரிணி! எவ்வளவோ சாமர்த்தியமாகப் பேசுகிறாய். ஆனால், நீ நம்பிக் கொண்டிருக்கிறாயே, உன் கணவர் என்றாவது மனம் திருந்தி வந்து உனக்கு வாழ்வு அளிப்பார் என்று, அந்த நேரத்தில் இந்தக் குழந்தையே உனக்கு இடையூறாக இருக்காதா அம்மா. என்னதான் சமாதானங்கள் சொன்னாலும், அவர் நம்புவாரா ?''

''தாத்தா, நம்பிக்கை என்பது கணவன், மனைவி இருவருக்கும் தேவையான அத்தியாவசிய அம்சம். இந்த உலகமே, அவரைத் தூற்றுகிறது. ஆனால் அவரை என்னால் வெறுக்க முடியவில்லை. அவரை மறுபடியும் சந்திக்கும் பாக்கியம் எனக்கு இருந்தால் என்னுடைய சூழ்நிலைகளை அவருக்கு விவரமாகக் கூறுவேன். அப்படியும் நம்ப மறுத்தால், அவர் அளிக்கும் தண்டனையை நிறைவோடு ஏற்றுக் கொள்வேன்.'' — அவள் குரல் கம்மியது. வார்த்தைகள் வெளி வரவே தடுமாறின.

கண்ணன் ஆறு மாதக் குழந்தையாக வளர்ந்துவிட்ட நிலையிலே....

தாரிணி சமையல் அறையில் ஏதோ காரியமாக இருந்த நேரத்திலே, வாசல் கதவு தட்டப்படும் ஓசை கேட்டது. கதவைத் திறந்தவளுக்கு ஒரே அதிர்ச்சி ! தன் கண்களையே நம்ப முடியாமல் திணறினாள்!

''தாரிணி! என்னை மன்னித்துவிடு. நான் செய்த தவறுக்கெல்லாம் வேதனை அனுபவித்துவிட்டு நொந்து போய், கடைசியில் எது நிரந்தரம் என்பதை உணர்ந்து, உன் நிழலில் என்னைப் புனிதப்படுத்திக் கொள்ள வந்திருக்கிறேன்!'' — இப்படிப் பேசியவன் சேகர்.

''எதற்காக என்னுடைய வறண்ட வாழ்வில் இப்படி ஒரு திருப்பமோ தெரியவில்லையே, கடவுளே! நிலையற்ற இன்பத்தின் கோடி காட்டி, என் வாழ்வில் மறுபடியும் விளையாடாதே. என்னால் தாங்க முடியாது.'' விம்மினாள் தாரிணி.

சேகரின் கரங்கள் அவளை அரவணைப்பதற்கும் குழந்தை கண்ணனை வெளியே எடுத்துச் சென்றிருந்த ராமாமிருதம் உள்ளே திரும்புவதற்கும் சரியாக இருந்தது.

''வாடா கண்ணா! உன் அப்பா வந்துவிட்டார்டா '' என்றவாறே ஓடிச் சென்று

குழந்தையை அவரிடமிருந்து வாங்கிய தாரிணி, "தாத்தா, தாத்தா, நான் சொல்லவில்லை, எனக்கும், என் கண்ணனுக்கும் நல்ல காலம் என்றாவது ஒரு நாள் வரும் என்று? இனி, நீங்கள் கூறியபடி நான் ஊருக்குப் போய்விடுகிறேன். இந்த ஊர் காற்று இனி அவர் மீதும், என் குழந்தை மீதும் படவே வேண்டாம்" என்று ஏதேதோ கூறிக் கொண்டு போனவள், "அதுதான் நடக்காது" என்ற குரல் கேட்டு வாயடைத்து நின்றாள். ராமாமிருதம் விழித்தார்.

"தாரிணி! உன் தனிமை, விபரீத விளைவுகளை அளிக்கவில்லை என நினைத்து மகிழ்ச்சி அடைந்தேன். ஆனால், துரோகி! என் நினைவுகளைப் பொய்யாக்கிவிட்டு, ஆனந்தமாக வாழ்ந்துவிட்டு, அதன் பலனை இந்தப் பாவச் சின்னத்தைக் காட்டி, 'உன் அப்பா வந்துவிட்டாரடா' என்று கூறுகிறாயே, வெட்கமாக இல்லை? இனியும் இந்த வீட்டில் நான் இருக்கத்தான் வேண்டுமா? நான் வருகிறேன்"—வெளியே கிளம்பினான் சேகர்.

ராமாமிருதம் தாரிணியைப் பார்த்தார்.

"நில்லுங்கள்." — கர்ஜித்தாள் தாரிணி. பெண்மை வீறுகொண்டு எழுந்துவிட்டது.

"உங்களுக்கு மனச்சாட்சி என்பதே கிடையாதா? ஊரே பொறுப்பற்றவன், அயோக்கியன் என்றெல்லாம் அறிந்த ஒருவருக்கு, அறியாமையால், சந்தர்ப்பவசத்தால் மாலையிட்டு, எல்லாவற்றிலும் ஏமாற்றத்தை ஏற்று இந்தத் தாலியின் பாக்கியமாக என்றாவது ஒரு நாள் விடிவு காலம் ஏற்படும் என்ற நம்பிக்கையில் வாழ்ந்து வந்தேனே, என் வாழ்க்கையில் என்ன தவற்றைக் கண்டுவிட்டீர்கள்?"

"இந்த அவமானத்தின் சின்னம்?" சேகரின் ஆள்காட்டி விரல் குழந்தையைச் சுட்டிக் காட்டியது.

"அம்மா, தாரிணி, நான் சொன்னதைக் கேட்டாயா?"

"சற்றுப் பொறுங்கள்" என்ற தாரிணி, பரபரப்புடன் உள்ளே சென்று, பெட்டியைத் திறந்து, தேடி, கையில் எதையோ எடுத்துக் கொண்டவள், கூடத்துக்கு வந்து, தன் கணவனை நெருங்கினாள்.

"இந்தப் படத்தில் உள்ள துர்ப்பாக்கியவதியை உங்களால் அடையாளம் கண்டு கொள்ள முடிகிறதா? ஆத்திரம் அறிவை அழித்துவிடும். கோபத்தையெல்லாம் விட்டு, சற்று நிதானமாகப் பார்த்துவிட்டுக் கூறுங்கள். பிறகு, இந்த அவமானச் சின்னத்தின் உறவைக் கூறுகிறேன்" என்றாள் தாரிணி நிதானமாக.

புகைப்படத்தை உற்று நோக்கிய சேகர் உடல் தள்ளாடியது.

"கல்யாணி, கல்யாணி." — "தாரிணி, நானும் கல்யாணியும் சேர்ந்து எடுத்துக் கொண்ட போட்டோ, உன் கைக்கு எப்படிக் கிடைத்தது? கல்யாணி எங்கே?"— பதறினான் அவன்.

"அவள் கொடுத்து வைத்தவள். உங்களுடன் சேர்ந்து போட்டோ எடுத்துக் கொள்ளும் பாக்கியம் அவளுக்கு இருந்தது. அது மட்டுமா? வஞ்சனைகளும், ஏச்சுக்களும்,



டாக்டர்: உங்களை எப்பவாவது டிஸ்பெப்ஸியா வியாதி கஷ்டப்படுத்தியிருக்கா?

நோயாளி: ஒரே ஒரு தடவை!

டாக்டர்: அது எப்போ?

நோயாளி: நான் அந்த வார்த்தைங்களை எப்படி உச்சரிக்கிறதுன்னு தெரியாம திணறியபோது!

பேச்சுக்களும் சூழ்ந்த இந்த உலகிலிருந்து விடைபெறும் பாக்கியமும் அவளுக்கு இருந்தது."

"கல்யாணி இறந்துவிட்டாளா? அடடா, எவ்வளவு பெரிய பாவத்துக்கு ஆளாகிவிட்டேன்" பதற்றமடைந்தான் அவன்.

"அவலமான நிலையில், திக்கற்று, வேலை ஒன்றைத் தேடி நான் சென்ற அதே பள்ளியில், வாழ்வைத் தேடி, ஏற்கனவே அவள் அடைக்கலம் புகுந்தவள் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்க நியாயம் இல்லை.

"பாவம், பேதைப் பெண், குறுகிய காலத்தில் என்னிடம் உயிராகப் பழகி, தன் மனத்திலிருந்த எல்லாவற்றையும் கொட்டித் தீர்த்துவிட்டாள். அது மட்டுமா? தன்னுடைய நிலையை விளக்கி, உங்களை எப்படியாவது தேடிக் கண்டு பிடிக்க வேண்டும் என்ற ஆர்வத்துடன், இந்தப் போட்டோவைக் கொண்டு வந்து, என்னிடம் காட்டிய போது, என்னத்தைச் சொல்வது? கூடை நெருப்பை அள்ளி யாரோ தலை மீது கொட்டியதுபோல் உடலை எரிந்தது. என்ன செய்ய முடியும்? இந்தச் சின்னக் கண்ணனைச் சுமந்து அவள் தவிக்க, அவள் கூறிய வார்த்தைகளின் சுமைகளைத் தாங்க முடியாமல் நான் திணறினேன்.

"உங்கள் ஆண்மைக்குத் தன் பெண்மையைப் பலி கொடுத்துவிட்டு, சற்றுமுன் கூறினீர்களே, இந்த அவமானச் சின்னத்தை, பத்து மாதங்கள் சுமந்து கடைசிக் காலத்தில் நோயுற்று, இந்தக் குழந்தைக்கு நானே தாயாக வேண்டும் என்று சத்தியம் வாங்கிக் கொண்டு கண்ணை மூடிவிட்டாள். இப்போது புரிகிறதா?" என்றவள், ஓடிச் சென்று குழந்தை கண்ணனை எடுத்துக் கொண்டு, "என் கண்ணு, யாருக்கு நீ அவமானத்தைத் தந்தாய் என்று நீயே சொல்லுடா" என்று கண் கலங்கினாள்.

ராமாமிருதத்துக்கு எல்லாமே வியப்பாக இருந்தது. அவருக்குப் புரியாத பல விஷயங்களைத் தாரிணி இப்போது விளக்கிவிட்டாள். மெதுவாக அந்த அறையை விட்டு வெளியேறினார் அவர். "தாரிணி, நீ கெட்டிக்காரப் பெண் அம்மா!" என்று அவர் வாய் முணுமுணுத்தது.

# மறுபடியுமா..? மாட்டேன்!

சீரலைவாய் நம்பி



அருள்நாயகம் உயர்நிலைப் பள்ளி என்றுமில்லாமல் அன்று ஒரே ஆரவாரமாக இருந்தது. எங்கு பார்த்தாலும் 'குமரவேள் ஒழிக, குமரவேள் ஒழிக' என்ற கூச்சல். எல்லாச் சுவர்களிலும் இடம் விடாமல் எழுதப்பட்டு விட்டது. என்ன இருந்தாலும், குமரவேள் மோகனை இவ்வளவு தூரம் கண்டித்திருக்கக் கூடாது. அவன் யாரென்று தெரிந்திருந்தும் அவர் செய்தது தவறுதான். அருள்நாயகம் இல்லையென்றால் இந்தப் பள்ளி ஏது? இந்தப் பள்ளி இல்லையென்றால் நாம் ஏது ? இப்படிப் பேசினர் சக ஆசிரியர்கள்.

மோகன் அருள்நாயகத்தின் ஒரே செல்வ மைந்தன். அருள்நாயகம் அவ்வட்டாரத்தில் பெரும் புள்ளி; பல இலட்சங்களுக்கு அதிபதி. நினைத்ததைச் செய்து முடிக்கும் ஆற்றல் படைத்தவர். தாம் கட்டி நிர்வகித்துவரும் சொந்தப் பாடசாலையிலேயே தமது மகனையும் படிக்க வைத்திருந்தார். தனது தந்தைக்கு இருந்த செல்வாக்கும், பணமும், அவனை இளமையிலிருந்தே தறுதலையாக்கிவிட்டன. பல தீய மாணவர்களின் சேர்க்கையும் ஏற்பட்டது. வகுப்புகளுக்கு வராமல் மட்டம் போடுதல், ஆசிரியர்களைக் கேலி செய்தல் போன்ற குணங்கள் மலிந்தன. ஆசிரியர்கள் அதைக் கண்டும் காணாது இருந்தனர். தலைமை ஆசிரியரும் நடவடிக்கை எடுக்க அஞ்சி வாளாவிருந்து விட்டார்.

இந்தச் சூழ்நிலையில்தான் குமரவேள் அந்த உயர்நிலைப் பள்ளிக்குப் புதிய பட்டதாரி ஆசிரியராக வந்து சேர்ந்தார். அதுவும் மோகனின் வகுப்பாசிரியராக இருந்தார். அவரிடம் மோகனைப் பற்றி எல்லா விவரங்களும் சொல்லி எச்சரிக்கப்பட்டது. அவரும் மிக எச்சரிக்கையாகவே நடந்தார். என்றாலும் அவரது இளமை நெஞ்சுக்கு அவன் செய்யும் செயல்கள் கொதிப்பையும், வெறுப்பையும் மூட்டின. என்றாலும் வாளாவிருந்தார். இவர் பாடம் நடத்தும்போது சிறிது ஓசை இருப்பினும் இவரால் தொடர்ந்து நடத்த இயலாது. இது அவரது இயல்பு. எல்லா மாணவர்களும் இதனைப் புரிந்துகொண்டு நடந்து கொள்வர்.

குமரவேளை மோகன் ஓர் இடைஞ்சலாகக் கருதினான். அவனால் வழக்கத்துக்கு மாறாக அமைதியாக இருக்க இயலவில்லை. சில நாட்களில் வெளியே போய் விடுவான். அவரும் கேட்பதில்லை. ''இந்தக் குமரவேளுக்கு நாம் பயப்படுவதா? நாம் யார்?'' என்ற ஆணவ உணர்ச்சி மோகனுக்கு எழுந்தது. 'வகுப்பை விட்டு அவர் வேண்டுமானால் வெளியேறட்டும்' என்ற முடிவில் வகுப்பறையில் இருந்தான். குமரவேள் ஆங்கிலப் பாடம் நடத்திக் கொண்டிருந்தார். மோகன் அவ்வகுப்பிலுள்ள ஒரு பெண் மீது காகித அம்பு செய்து வீசிக் கொண்டிருந்தான். அந்தப் பெண் உடனே எழுந்து ஆசிரியரிடம் முறையிட்டான் அழுது கொண்டே. ''நான் இல்லே சார்....! இங்கே யாரை வேண்டுமானாலும் கேட்டுப் பாருங்க....'' என்றான் மோகன்.

மிக முக்கியமான பாடம் பாதியில் நின்றது. அவருக்கு ஆத்திரம் ஆத்திரமாக

வந்தது. என்றாலும் அமைதியாக, ''தம்பி...! மோகன்! உன்னுடைய குறும்புத்தனத்தால் பாடம் நின்றுவிட்டது. நீ வசதியுடைய பையன். பரவாயில்லை. மற்றவர்களுடைய நிலைமையை எண்ணிப் பார். இனி இவ்வாறு செய்யாதே '' என்றார்.

''சார்.... நான்தான் குற்றவாளி என்பதற்கு என்ன சாட்சி ?'' என்றான்.

''உன்னைத் தவிர வேறு யாருக்கும் அந்தத் துணிச்சல் இல்லையப்பா....''

'' ஏன் நீங்கள் அடிச்சிருக்கப்படாதோ?''

''டேய், நாக்கை அடக்கிப் பேசு. ஓர் ஆசிரியரை என்ன பேசறதுன்னு வரம்பு இருக்கு.''

''நீங்களும் நாக்கை அடக்கிப் பேசுங்க.... ஒரு பொம்பளைக் குட்டிக்குப் பரிந்து பேச நீங்களே, நீங்க என்ன அவளை 'லவ்' பண்ணுறீங்களா ?''

இவ்வார்த்தைகளைக் கேட்டதும் குமரவேலுக்கு அங்கம் பதறியது. கோப வெறியில் மோகனின் கன்னங்களில் இரண்டு அறைகள் விட்டார். அவ்வளவுதான்; ஒரே கூச்சலும், குழப்பமும் தொடங்கிவிட்டன. குமரவேலை வேலையிலிருந்து நீக்கினால்தான் பள்ளிக்கு வருவோம் என மோகன் கூட்டம் கத்தியது. தலைமையாசிரியர் என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்தார். அருள்நாயகத்துக்குச் செய்தி எட்டியது. மோகனின் தாயார், 'பிள்ளையை எப்படி அடிக்கலாம்? அடித்த கைகளை முறிக்க வேண்டும்' என்றாள்.

இந்நிலையில் தலைமை ஆசிரியர் உடனே வர வேண்டுமென்று போனில் அறிவிக்கப்பட்டது.

'' சரி, விஷயம் முற்றி விட்டது. இனி நடப்பது நடக்கட்டும்'' எனக் கருதிய தலைமை ஆசிரியர் குமரவேலைக் கூப்பிட்டு, ராஜிநாமாக் கடிதத்தை எழுதித் தயாராக வைத்துக் கொள்ளும்படி சொன்னார். இருவரும் அருள்நாயகத்தின் பங்களாவை அடைந்தனர். அதுபோழ்து அருள்நாயகம் படுக்கையைவிட்டு எழுந்து உட்கார்ந்திருந்தார். அவரிடம் வந்திருந்த காச நோய் அவரை எலும்பும் தோலுமாக ஆக்கிவிட்டிருந்தது. அருகில் அவர் மனைவியும் ஒரு பக்கத்தில் மோகனும் நின்று கொண்டிருந்தனர். பற்றாக்குறைக்கு எதைச் சொன்னாலும் இம்மி பிசகாமல் செய்துவிடத் துடிக்கும் இரண்டு வஸ்தாதுகள் வேறு நின்று கொண்டிருந்தனர்.

வேலைக்காரன், தலைமையாசிரியரும், குமரவேலும் வந்திருப்பதாக அறிவித்தான். அருள்நாயகம் தமது மனைவியையும் மகனையும் உள்ளே போகும்படி கட்டளையிட்டார். வந்திருந்தவர்களை உள்ளே வரும்படி உத்தரவிட்டார். இருவரும் என்ன நடைபெறப் போகிறதோ என்ற அச்சத்தில் குனிந்த தலை நிமிராமல் வந்தனர். வரும்பொழுதே, ''ஏதோ தவறுதலாக சார் அடிச்சுட்டாரு... நானும் எவ்வளவோ சொல்லி வைச்சிருந்தேன். இந்தத் தடவை மட்டும் மன்னிச்சுடுங்க. இவர் தம் வேலையை ராஜிநாமாப் பண்ணிடறேன்னு சொல்லிட்டாரு'' என்றார் தலைமை ஆசிரியர்.

''மிஸ்டர் குமரவேல்...! என் பையன் என்ன செய்தான்?''

''வகுப்பு நடத்த முடியாமல் ஒரு பெண்ணிடம் வம்பு செய்தான். என்னையும் அவமானகரமாகப் பேசினான். அதனால் உணர்ச்சிவசப்பட்டு விட்டேன்.''

'' அப்படியா ? அவனைப் பற்றி எல்லா விவரமும் எனக்குத் தெரியணுமே. இதுவரை





"என்ன சார், வேணும்?"
"இரண்டு ரூபா கைமாற்று!"



"என் வலது பக்க வீட்டில் மிருதங்கம் நாராயணசாமியும், இடது பக்க வீட்டில் பிடில் கிருஷ்ணசாமியும் குடிவந்திருக்கிறார்கள்!"
"பலே! நீங்கள் இருப்பது எந்தத்தெரு?"
"மைலாப்பூர் கச்சேரி ரோடு!"

யிலும் யாரும் அவனைப் பற்றிக் கெடுதலாகச் சொல்லவே யில்லையே. தலைமை ஆசிரியர் சார், ஒன்றும் ஒளிவு மறைவில்லாமல் அவனைப் பற்றிச் சொல்லுங்கள்..." இவ்வாறு சொல்வதற்குள் தொடர்ந்து மூன்று முறை அவர் இருமிவிட்டார். மிகவும் களைத்துக் காணப்பட்டார். மிக மென்மையாக ஆனால் அழுத்தமாகப் பேசினார்.

தலைமையாசிரியர் இதுவரையில் தாம் தெரிவிக்காதது பற்றி மன்னிப்புக் கேட்டு மோகனின் அட்டகாசங்களைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சொல்லலானார்.

"தலைமை ஆசிரியர் சார்! நான் உங்களை முதல் குற்றவாளியாகக் கருதுகிறேன். இந்தப் பள்ளிக்கூடத்தில் நீங்கள் தலைமையாசிரியர் மட்டுமல்ல; மாணவர்களுக்குத் தகப்பனைப் போன்றவர் இல்லையா?"

"ஆமாம்..."

"என் மகனைப் பற்றிய விஷயம் என் இது வரையில் எனக்குத் தெரிவிக்கப்படவில்லை?"

"நீங்க மோகன் சார்பாகத்தான் பேசுவீங்கன்னு நினைச்சேன்."

"இல்லை. ஒரு நாளும் இல்லை. அந்தத் தவற்றை என் தகப்பனார் செய்து தம் மகனைப் பழிவாங்கி விட்டார்." அருள்நாயகம் தொடர்ந்தார்:

"செல்வராஜ் உயர்நிலைப் பள்ளியில் வெங்கப்பா என்ற ஓர் ஆசிரியர் இருந்தார். மிகவும் கண்டிப்பும் நேர்மையும் உள்ளவர். அவர் வகுப்பில் நான் படிச்சேன். நானும் ஒரே பையன். அளவுக்கு மீறிய செல்லம். அதனால் வரம்பு மீறிய திமிர்... இப்ப மோகன் என்னென்ன செய்தானோ அவற்றையெல்லாம் நானும் செய்தேன். வெங்கப்பாவிடம் என் பேட்டுச் செல்லவில்லை. நான் ஒரு பெண்ணின் மீது களங்கம் கற்பித்தேன். வெங்கப்பா அன்பாகச் சொன்னார். எதிர்த்தேன். மிரட்டினார். இட்டினேன். கன்னத்தில் அறைந்தார். அவ்வளவுதான்! என்னால் முடிந்தவரை ரகளை செய்தேன். இல்லாததும் பொல்லாததும் வெங்கப்பாவின் மீது சொன்னேன். பாசம் நிறைந்த என் அம்மாவும் சேர்ந்து கொண்டார்கள். என் தகப்பனார் ஒரு முன்கோபி. ஆத்திரம் எல்லை மீறியது. வெங்கப்பா கொண்டு வரப்பட்டார்.

'ஏய், வெங்கப்பா! என்ன திமிரய்யா உமக்கு? என் பிள்ளைன்னு தெரிஞ்சும் அடிச்சிருக்கியே....'

'ஓர் ஆசிரியனுக்குக் குப்பை கூட்டறவன் பிள்ளையும் கோடீசுவரன் பிள்ளையும் ஒன்றுதாங்க...'

'தத்துவம் இருக்கட்டும். ஏன் அடிச்சே?'

'நடத்தை சரியில்லை. இப்படியே போனால் கெட்டுடுவான்னு கண்டிச்சேன். இடிப்பாரை இல்லா அரசன் தானே அழிஞ்சுடுவான்.'

'ஓகோ! நீதான் இடிப்பாரையா... நான் உனக்கு அடிப்பாரை..." என்று சொல்லிக் கொண்டே என் தகப்பனார் ஆசிரியரை அடித்துவிட்டார்.

அந்த ஆசிரியர் போகும்போது அழுது கொண்டே சொன்னது இன்னும் எனக்கு நினைவில் உள்ளது.

'பண்ணையார்... என்னை அடிச்சுட்டீங்க... இது உங்களால் இப்ப முடியலாம். ஆனா உங்க பையனை அழிச்சிடப் போறீங்க. அதை உங்களால் தடுக்க முடியாது.'

காலங்கள் கழன்றன. கண்டிப்பில்லாத எனது வாழ்க்கை காட்டாற்று வெள்ளம் போல் சென்றது. எண்ணியதை முடித்தேன். பல தீய வழிகளில் கெட்டலைந்தேன். இறுதியாக... இறுதியாக..."

அவரால் பேச முடியவில்லை. கண்ணீர் மட்டும் வழிந்தது. பாழாய்ப் போன இருமல் அவரை உலுக்கி எடுத்தது. பத்து நிமிடங்களுக்குப் பிறகு பேசினார்: "இடிப்பாரை இல்லாத அரசன் அழிவான் என்பதை என்னை வைத்தே புரிந்து கொண்டேன். மறுபடியும் நானே அந்தத் தவற்றைச் செய்ய மாட்டேன்!"

மோகன் குமரவேலிடம் மன்னிப்புக் கேட்டான். குமரவேலே அவனின் இடிப்பாரையாக இருந்தார். அருள்நாயகம் நெஞ்சமும் குளிர்ந்தது.

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam




ஆண்மை —
அடக்கியாளும்,
ஆர்வமூட்டும்,
அலைபாயும்,
அதிரடிக்கும்.
ஆண்மையின்
பன்முகப்
பண்புகளைப்
படித்தறிந்த படைப்பு
‘டெரோஸெல்’
ஷர்ட்டிங்!

**டெரோஸெல்®**

‘டெரோஸெல்’ என்றொரு திருச்சொல்—தரிப்பவனை
மன்னனாக்கும் தாரக மந்திரம்! மபத்லால் ‘டெரோஸெல்’
ஷர்ட்டிங்—எழிலாடும் வண்ணங்களில், இளஞ் சாயல்களில்,
திசையெட்டும் வென்றிட்ட டிசைன்களில் வருகுது.
ஒப்பிலா ஆடவ-மாமணிகளுக்கு உறவுசொல்லும் ஷர்ட்டிங்!
உயர்தரக் காட்டன் மற்றும் போலியெஸ்டர் இழைகலந்த
பழுதில்லா நெசவு!

**மபத்லால் க்ரூப்**

AIYARS-M.245 TM

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon இலங்கையில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)